## இரண்டாவது

# மதுரைக்காண்டம்.

## கக.—காடுகாண்காதை.

திங்கண் மூன்றடுக்கிய திருமுக் குடைக்கீழ்ச்
...திர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
...த தாழ பிண்டிக் கொழுநிழ லிருந்த
ஆதியிற் றோற்றத் தறிவனை வணங்கிக்
கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லா
அந்தி லரங்கத் தகன்பொழி லகவயிற்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
மாதவத் தாட்டியு மாண்புற மொழிந்தாங்
கன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கித்
தென்றிசை மருங்கிற் செலவுவிருப் புற்று
வைகறை யாமத்து வாரணங் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற
வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்த
இளமரக் கானத் திருக்கை புக்குழி
வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதொ றூழிதொ றுலகங் காக்க
அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வ... ...யு மிமயமுங் கொண்டு
... தென்னவன் வாழி
...திருக்குலம் விளங்கச்
...ர் திறல்விளங் காரம்
...ான் வாழி
...வன் சென்னியென்

இடியுடைப் பெருமழை *யெய்தா தேகப்
பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத்
தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை
யாது நும்மூ ரீங்கென் வரவெனக்
கோவலன் கேட்பக் குன்றாச் சிறப்பின்
மாமறை யாளன் வருபொரு ளுரைப்போ
னீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
வாயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்
வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
†மின்னுக்கொடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமு
மென்கண் காட்டென் றென்னுளங் கவற்ற
வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேனா
றென்னவ னாட்டுச் சிறப்புஞ் செய்கையுங்
கண்மணி குளிர்ப்பக் கண்டே னாதலின்
வாழ்த்திவந் திருந்தே னிதுவெ
னித்திறம் புரிந்தோன் செப்பக்
மாமறை முதல்வ மதுரைச் செ
கூறு நீயெனக் கோவலற் குரை

* பெய்யாதேகவென்றும் பா
† இதற்குப் பொருள்செய்த

கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்திய லிழந்த வியனிலம் போல
வேனிற் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
றானலந் *திருகத் தன்மையிற் குன்றி
முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளுங்
காலை யெய்தினிர் காரிகை தன்னுட
னறையும் பொறையு மாரிடை மயக்கமு
நிறைநீர் வேலியு முறைபடக் கிடந்தவிந்
நெடும்பே ரத்த நீந்திச் சென்று
கொடும்பை நெடுங்குளக் கோட்டகம் புக்காற்
பிறைமுடிக் கண்ணிப் பெரியோ னேந்திய
வறைவாய்ச் சூலத் தருநெறி கவர்க்கும்
வலம்படக் கிடந்த வழிநீர் துணியி
னலாதலை மராமு †முலறுதலை யோமையும்
பொரியரை யுழிஞ்சிலும் புன்முளி மூங்கிலும்
வரிமரற் றிரங்கிய கரிபுறக் கிடக்கையு
நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்குங்
கானமு மெயினர் கடமுங் கடந்தா
லைவன வெண்ணெலு மறைக்கட் கரும்புங்
கொய்பூந் தினையுங் கொழும்புன வரகுங்
காயமு மஞ்சளு மாய்கொடிக் கவலையும்
வாழையுங் கமுகுந் தாழ்குலைத் தெங்கு
மாவும் பலாவுஞ் சூழடுத் தோங்கிய
தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்று
மம்மலை வலங்கொண் டகன்பதிச் செல்லுமி
னவ்வழிப் படரீ ராயி னிடத்துச்
செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றுந்
தடந்தாழ் வயலொடு தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவி ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண் டாங்கு
விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்

* இருகியெனவும் பாடம்.

† அலறுதலையெனவும்பாடம்.

புண்ணிய சரவணம் பவகா ரணியோ
டிட்ட சித்தி யெனும்பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள. வாங்குப்
புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்
பவகா ரணிபடிந் தாடுவி ராயிற்
பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவி
ரிட்ட சித்தி யெய்துவி ராயி
னிட்ட சித்தி யெய்துவிர் நீரே
யாங்குப் பிலம்புக வேண்டுதி ராயி
னோங்குயர் மலையத் துயர்ந்தோற் றொழுது
சிந்தையி லவன்றன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தா
னிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலைப்
பொலங்கொடி மின்னிற் புயலைங் கூந்தற்
கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி
யிம்மைக் கின்பமு மறுமைக் கின்பமு
மிம்மையு மறுமையு மிரண்டு மின்றியோர்
செம்மையி னிற்பதுஞ் செப்புமி னீயிரிவ்
*வரைத்தாள் வாழ்வேன் வரோத்தமை யென்பே
னுரைத்தார்க் குரியே னுரைத்திரா யிற்
றிருத்தக் கேர்க்குத் திறநதேன் கதவெனுங்
கதவந் திறந்தவள் காட்டிய நன்னெறிப்
புதவம் பலவுள போகிடை கழியன
வொட்டுப் புதவமொன் றுண்டத னும்பர்
வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
யிறுதியி லின்ப மெனக்கீங் குரைத்தாற்
பெறுதிர் போலுநீர் பேணிய பொருளெனு
முரையீ ராயினு முறுகண் செய்யே
னெடுவழிப் புறத்து நீக்குவ லும்மெனு
முரைத்தா ருளரெனி னுரைத்த மூன்றின்
களைப்படுத் தாங்குக் காட்டினள் பெயரு
ருமறை மருங்கி னோந்திரு மெட்டினும்

*ழெனவும்பாடம்.

வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டு
மொருமுறை யாக வுளங்கொண் டோதி
வேண்டிய தொன்றின் விரும்பினி ராடிற்
காண்டகு மரபின வல்ல மற்றவை
மற்றவை நினையாது மலைமிசை நின்றோன்
பொற்று மரைத்தா ளுள்ளம் பொருந்துமி
னுள்ளம் பொருந்துவி ராயின் மற்றவன்
புள்ளணி நீள்கொடி புணர்நிலை தோன்றுந்
தோன்றிய பின்னவன் றுணைமலர்த் தாளிணை
யேன்றுதுயர் கெடுக்கு மின்ப மெய்தி
மாண்புடை மரபின் மதுரைக் கேகுமின்
காண்டகு பிலத்தின் காட்சி யீதாங்
கந்நெறிப் படரீ ராயி னிடையது
செந்நெறி யாகுந் தேம்பொழி லுடுத்த
வூரிடை யிட்ட காடுபல கடந்தா
லாரிடை யுண்டோ ராரணர்த் தெய்வ
நடுக்கஞ் *சாலா நயத்திற் றோன்றி
யிடுக்கண் செயயா தியங்குநர்த் தாங்கு
மடத்துடன் கிடக்கு மதுரைப் பெருவழி
நீணிலங் கடந்த நெடுமுடி யண்ண
றாடொழு தகையேன் போகுவல் யானென
மாமறை யோன்வாய் வழித்திறங் கேட்ட
காவுந்தி யையையர் கட்டுரை சொல்லு
நலம்புரி கொள்கை நான்மறை யாள
பிலம்புக வேண்டும் பெற்றியீங் கில்லை
கப்பத் திந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட் டியற்கை விளங்கக் காணு
மிறந்த பிறப்பி னெய்திய வெல்லாம்
பிறந்த பிறப்பிற் காணு யோநீ
வாய்மையின் வழாது மன்னுயி ரோம்புநர்க்
கியாவது முண்டோ வெய்தா வரும்பொருள்
காமுறு தெய்வங் கண்டடி பணிய
நீபோ யாங்களு நீணெறிப் படர்குது
மென்றம் மறையோற் கிசைமொழி யுணர்த்திக்
குன்றாக் கொள்கைக் கோவலன் றன்னுட

* சாராவெனவும்பாடம்.

னன்றைப் பகலோ ரரும்பதித் தங்கிப்
பின்றையு மவ்வழிப் பெயர்ந்துசெல் வழிநாட்
கருந்தடங் கண்ணியுங் கவுந்தி யடிகளும்
வருந்துசெல் வருத்தத்து வழிமருங் கிருப்ப
விடைநெறிக் கிடந்த வியவுக்கொண் மருங்கிற்
புடைநெறிப் போயோர் *பொய்கையிற் சென்று
நீர்நசை வேட்கையி னெடுந்துறை நிற்பக்
கானுறை தெய்வங் காதலிற் சென்று
நயந்த காதலி னல்குவ ளிவளென
வயந்த மாலை வடிவிற் றோன்றிக்
கொடிநடுக் குற்றது போல வாங்கவ
னடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீ ருகுத்து
வாச மாலையி னெழுதிய மாற்றந்
தீதிலேன் பிழைமொழி செப்பினை யாதலிற்
கோவலன் செய்தான் கொடுமையென் றென்முன்
மாதவி மயங்கி வான்றுய ருற்று
மேலோ ராயினு நூலோ ராயினும்
பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்
பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்மெனச்
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்
வெண்முத் துதிர்த்து வெண்ணிலாத் திகழுந்
தண்முத் தொருகாழ் தன்கையாற் பரிந்து
துனியுற் றென்னையுந் துறந்தன ளாதலின்
மதுரை மூதூர் மாநகர்ப் போந்த
தெதிர்வழிப் பட்டோ ரெனக்காங் குரைப்பச்
சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்
பாத்தரும் பண்பநின் பணிமொழி யாதென
மயக்குந் தெய்வமிவ் வன்காட் டுண்டென
வியத்தகு மறையோன் விளம்பின னாதலின்
வஞ்சம் பெயர்க்கு மந்திரத் தாலிவ்
வைஞ்சி லோதியை யறிகுவன் யானெனக்
கோவல னாவிற் கூறிய மந்திரம்
பாய்கலைப் பாவை மந்திர மாதலின்
வனசா ரிணியான் மயக்கஞ் செய்தேன்

* பொய்கையிற்பொருந்தியென்றும்பாடம்.

புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கு
மென்றிற முரையா தேகென் றேகத்
தாமரைப் பாசடைத் தண்ணீர் கொணர்ந்தாங்
கயர்வுறு மடந்தை யருந்துயர் தீர்த்து
மீதுசெல் வெங்கதிர் வெம்மையிற் றொடங்கத்
தீதியல் கானஞ் செலவரி தென்று
கோவலன் றன்னொடுங் கொடுங்குழை மாதொடு
மாதவத் தாட்டியு மயங்கத ரழுவத்துக்
குரவமு மரவமுங் கோங்கமும் வேங்கையும்
விரவிய பூம்பொழில் விளங்கிய விருக்கை
யாரிடை யத்தத் தியங்குந ரல்லது
மாரி வளம்பெறா வில்லே ருழவர்
கூற்றுறழ் *முன்பொடு கொடுவில் லேந்தி
வேற்றுப்புலம் போகிநல் வெற்றங் கொடுத்துக்
கழிபே ராண்மைக் கடன்பார் திருக்கும்
விழிநுதற் குமரி விண்ணோர் பாவை
மையறு சிறப்பின் வான நாடி
யையைதன் கோட்ட மடைந்தன ராங்கென.

க – ச. திங்கண்மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதைதாழ் பிண்டிக் கொழுநிழ லிருந்த
வாதியி லொற்றத் தறிவனை வணங்கி

இ - ள். கோதைகள் தாழ்ந்த பிண்டியினது வளவிய நிழற்கண்ணே மூன்று திங்களையடுக்கினாற்போலும் திருமுக்குடையினதுகீழ் இளஞாயிற்றினது ஒளியினும் ஒளிசிறப்பவிருந்த அறிவனை வணங்கியென்க.

திங்கண்முதலிய †மூன்றெனினுமாம். முக்குடையாவன: சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனமென்பன இன்னுருபு தொக்கு அது பொருவாம் பொருண்மை தந்தது. திகழ்தல் - விளங்குதல். சிறந்து - சிறப்ப கோதைதாழ் பிண்டியென்றார், அவன்பிண்டி கடவுட்டன்மையான் என்ஞான்றும் ‡மாலையாகப் பூக்குமாதலின். ஆதியி லொற்றத் தறிவனென்பது ஆதியின்மையைத் தோற்றமாக வுடையனென்பதாம், எனவே இறுஞ்செபபி அந்தமின்மையை முடிவாகவுடைய

* மொய்ம்பொடென்றும்பாடம்.

† மூன்றாவன: சந்திரன், சூரியன், அக்கினி.

‡ அசோகு மாலையாகப் பூக்குமென்பதை. "முழாத்திரண் மொய்ம்மலர்த் தாமந் தாழ்ந்துமேல், வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினங், குழாத்தொடு மிறைகொளக் குனிந்து கூங்குயில், விழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே" என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளாலுணர்க, முத்தியிலம்பகம், சகஉ.

னென்பதூஉமாம்; ஆகவே ஆதியும் அந்தமும் இல்லாதவனென்றவாறும்; எனவே தனக்குப் பிறிதொருவர் முதலாதலில்லாதவனென்பதாம். இன்னும் இதற்கு யாவர்க்கும் தானேமுதலாயவனென்றுரைப்பினுமமையும். ஆதியிற்றோற்றம் பாடமாயின், ஆதிக்காலத்தினும் முற்றோன்றியவனென்க. என்றகருத்து காலத்தின்முற்றோன்றும்பொருள்கள் யாவுமின்மையின், அதனினும் முற்றோன்றியவனென்பதாம். அறிவன் - உறையூரிலருகன். வணங்கி - முதனாட் புரிந்து புக்கவர் வணங்கியென்க.

ரு - அ. கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லா
மந்தி லரங்கத் தகன்பொழி லகவயிற்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
மாதவத் தாட்டியு மாண்புற மொழிந்து

இ - ள். முற்கூறிய நிக்கந்தனுடைய பள்ளியிடத்துள்ள *கடவுளர்க்கெல்லாம் ஆற்றிடைக்குறையாகிய அவ்விடத்து அகன்றபொழிலின்கட் சாரணர்கூறியமொழியைக் கவுந்தியடிகளும் இனிமையுறமொழிந்தென்க.

†நிக்கந்தனைக் கந்தனென்றார். அந்தில் - அசையுமாம். அரங்கம் - முற்கூறிய ஆற்றுவீயரங்கம்; திருவரங்கமுமாம். அகன்பொழில் - அம் மரம்பயிலடுக்கம். சாரணர் - பெரும்பெயரையரிட்ட சிலாதலத்துத் தருமஞ்சாற்றுஞ்சாரணர்; அவர்கூறியமொழி - ‡"ஒளியுறி னல்லது, போதார் பிறவிப் பொதியறையோர்" என்றமொழி; அதனைக் கவுந்தியடிகளும் மொழிந்தென்க.

அ - கூ. ஆங்கு
அன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கி

இ - ள். அன்று §சாவகருறைவிடத்து விட்டுத் தங்கியென்க.

என்பது காலைப்பொழுதில் வாய்மொழிகேட்டு மாடப்புணைபோகித் தென்கரையெய்திப் பூம்பொழிலிருந்துழிச் சாபவிடைசெய்து மாலைப்பொழுதின்கட் புறஞ்சிறைவாரணம் புரிந்துபுக்கனரெனவே அற்றைநான்றுதங்குதல் கூறவேண்டாதுமுடியும்; முடியவே வழிநாட் சாவகருறைகின்றவிடத்தே தங்கினராய் ஒடுங்கியென்க. அவரெனக் கடவுளரைச்சுட்டின், அவருறைவிடம் கந்தன்பள்ளியாமாகலானும், ஆண்டு இணங்காமை சொல்லவேண்டாவாகலானும் அவரென்றது சாவகரையென்க. கடவுளர்க்கெல்லாம் மாதவத்தாட்டி மாண்புறமொழிந்தெனவே கவுந்தியடிகள் கந்தன்பள்ளியுட் புக்கமையுணர்க. இங்ஙனங்கூறியது, ||"ஆறைங்காதம்" என்றமையானும் ¶"காவத மல்லது கடவா ராகிப், பன்னாட் டங்கிச்

---

* கடவுளர் - எண்டு முனிவர்; "தொன்முது கடவுட் பின்னர் மேய" என மதுரைக்காஞ்சியுள்ளும், "இப்பொழுது பொழுதென் றதுவாய்ப்பக் கூறிய, வெக் கடவுள்" எனக்கலித்தொகையுள்ளுங்கூறினர்.

† நிக்கந்தன் - அருகன். ‡ நாடுகாண்காதை, கககo - கககக.

§ சாவகர் - சைனர்களில் இல்லறத்தார்; இவர்களை ஶ்ராவகரென்பர்.

|| நாடுகாண்காதை, சஉ. ¶ நாடுகாண்காதை, கருச - கருரு.

சென்ற ஞொருநாள்'' என்றமையானும், ஈண்டும் "அன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கி'' என்றமையானும் சிலநாட்சென்றவழிச் செலவொழிந்தொழிந்து ஆண் டாண்டிருந்து ஆறிச்சென்றமை உணர்த்தற்கெனக்கொள்க.

௧0 - ௧௪. தென்றிசை மருங்கிற் செலவுவிருப் புற்று
வைகறை யாமத்து வாரணங் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற
வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்த
விளமரக் கானத் திருக்கை புக்குழி

இ - ள். தென்றிசைக்கண்ணேசெல்லுதலை விருப்பமுறுதலானே கோழி யூரை வைகறையாமத்தே கழிந்து செல்லாநின்றுழி வெய்யோன்வந்து முன்னர்க் குணதிசையை விளக்கிப் பின்னர்த் தான் தோன்றினானாக, வளவிய நீர்நிறைந்த மருதநிலமும் வாவியுஞ்சிறந்ததோர் இளமரக்காவின்மண்டபத்தே சென்று புக்க விடத்தெனக.

வாரணம் - கோழியூர். வணங்கி மொழிந்து அல்கினரடங்கி விருப்புற்று வாரணங்கழிந்து தோன்றினவளவிலே இருக்கைபுக்குழியென்க. விளங்கி - விளக்கி; விகாரம்.

௧௫ - ௧௬. வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதொ றூழிதொ றுலகங் காக்க

இ - ள். மன்னர்யாவரினும் மிக்க பெரியதகையினையுடைய எங்கோ வாழ் வானாக; ஊழிதோறும் ஊழிதோறும் இவ்வுலகை அவனே காப்பானாகவென்க.

௧௭ - உஉ. அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி

இ - ள் முன்னொருகாலத்துத் தனது பெருமையினதளவை அரசர்க்குக் காலான்மிதித்துணர்த்தி வேலானெறிந்த அந்தப் பழம்பகையினைக் கடல்பொறாது பின்னொருகாலத்து அவனது தென்றிசைக்கண்ணதாகிய *பஃறுளியாற்றுடனே பலவாகிய பக்கமலைகளையுடைய குமரிக்கோட்டையும் கொண்டதனால் வடதிசைக் கண்ணதாகிய கங்கையாற்றினையும்இமயமலையினையும் கைக்கொண்டு ஆண்டு மீண்டும் தென்றிசையையாண்ட தென்னவன் வாழ்வானாகவென்க.

என்றது : அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக் குண்டூர்க்கூற்றமுமென்னுமிவற்றை இழந்தநாட்டிற்

* "எங்கோ வாழிய... ... ..முந்நீர் விழவி னெடியோ, னன்னீர்ப் பஃ றுளி மணலினும் பலவே'' எனப் பஃறுளியாற்றைப்பாராட்டிக்கூறினர் புறப்பாட் டிலும் ; ௬.

காக்வாண்ட தென்னவன் வாழ்வானாகவென்றவாறு. அடியில் - அடியால். தன்னளவென்பதனைக் கடன்மேலேற்றலுமொன்று. அரசர்க்கு - உலகிலரசரெல்லார்க்குமென்க. வான்பகை - முன்பேசெய்தபகைமை. பஃறுளியென்னும் ஆற்றின்றன்மை வேனிற்காதையிற்கூறிப்போந்தாம். கோடு - மலை. கொடுங்கடல் - இவ்வளவெல்லாந்தந்தகடல். கடல் வடபால் எறிந்துகொண்ட எல்லையளவும் தனதாக்கி மீண்டும் தென்றிசையையாண்டவென ஒப்பாகலுமொன்று. அடியாலுணர்த்தி எறிந்த பல்கபொருது கொள்ளத் தானுங்கொண்டு ஆண்ட தென்னவனென்க.

௨௩ - ௨௫. திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி

இ - ள். திங்களாகிய செல்வனுடைய மரபு மேம்படுதற்கு இந்திரன்பூட்டிய வலிவிளங்கிய ஆரத்தை ஒளிபொங்கிய தனதுமார்பத்தேபூண்ட பாண்டியன் வாழ்வானாகவென்க.

விளங்கவென்பதனை விகாரவகையான் வியங்கோளாக்குவாருமுளர். விளங்கப்பூண்டோனென இயைக்க. திங்கட்செல்வனென்பதற்கு வேனிற்காதையில் உரைத்ததுரைக்க.

௨௬ - ௩௧. முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை யெய்தா தேகப்
பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத்
தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை

இ - ள். இவன் நம்முடைய முதல்வனது சென்னிமுடியிலே வளையையுடைத்தோனென்று இடியையுடைய பருவமழை தனதுநாட்டிற் பெய்தற்றொழிலெய்தாது ஏகிற்றாகத் தப்பாத விளையுளாகிய மிக்க வளஞ்சுரக்கும்படி அதனை *விலங்கிட்டாண்ட மன்னவன் வாழ்வானாகவெனக் குற்றந்தீர்ந்த சிறப்பினையுடைய தென்னவனை இங்ஙனமேத்திவந்திருந்த முதுமறையோனையென்க.

௩௨ - ௩௩. யாது நும்மூ ரீங்கென் வரவெனக்
கோவலன் கேட்ப

இ - ள். அம்மறையோனைநோக்கி, ஆண்டு, நும்மூர்யாது? ஈண்டு நும்வரவு என்னையெனக் கோவலன்வினவவென்க.

௩௩ - ௩௪. குன்றாச் சிறப்பின்
மாமறை யாளன் வருபொரு ளுரைப்போன்

---

* வேலையெறிந்து கடலை வற்றச்செய்ததும், இந்திரன்பூட்டிய ஆரத்தைப் பூண்டதும், இந்திரன்முடிமேல் வளையைச்செலுத்தியதும், மேகத்தைச் சிறைப்படுத்தியதும் பாண்டியன் உக்கிரவன்மன் செயலென்று மதுரைப்புராணங்கூறும்

இ - ள். மிக்க சிறப்பினையுடை— அம்மறையோன் தான் வருகின்றபொருளை உரைக்கின்றவனென்க.

வருபொருளென்ற பொதுமையான் வருதற்குக் காரணமும் ஊரின்பெயரு மென்பதாயிற்று.

கூ0 - சO. நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
வாயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்

இ - ள். நீலமேகம் ஓங்கிய பொன்மலைமீதே பக்கங்களில் விரிந்து மிகாமல் ஒக்கப் படிந்ததுண்டாகில் அதனையொப்பத் தனது படம்விரித்தெழுந்த ஆயிரந் தலையையும் கிட்டுதற்கரிய திறலையுமுடைய பாம்பணைப்பள்ளிமீதே தேவர்கள் பலரும் தொழுதேத்தத் திரைவிரியும் காவிரியாற்றிடைக்குறையிலே திருமகள்பொருந் திய திருமார்பையுடையோன் கிடந்தகோலமுமென்க.

மேகம் படிந்ததுபோலவென்க.

சக - ருக. வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதி ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கொடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ரார மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமும்

இ - ள். கொடிவழித்நீர்த்தமுதலிய மிக்க அருவிநீரையுடைய வேங்கட மென்று பெயர்கூறப்படும் மலையினுச்சிமீதே ஞாயிறுந்திங்களும் இருமருங்கும் ஓங்கிவிளங்கிய இடைப்பட்டவிடத்தே நல்ல நீலநிறத்தையுடையமேகம் தன்மின் னாகிய புதப்புடைவையையுடுத்துத் தன்வில்லாகிய பணியைப்பூண்டுநின்றாற்போ லப் பகையைவருத்தும் ஆழியையும் சங்கையும் அழகிய தாமரைக்கையகத்தே வலனுமிடனுமேந்தி அழகுகிளருமாரத்தைத் திருமார்பிற்பூண்டு பொற்பூவாடையை யுடுத்து வெளிப்பட்ட சிவந்த திருக்கண்மலரையுடைய நெடியோன் நின்ற கோலமுமென்க.

மேகம் இடைநிலைத்தானத்து உடுத்துப் பூண்டு நின்றதுபோல ஏந்திப் பூண்டு பொலிந்து உச்சிமீமிசைத்தோன்றிய நெடியோன் நின்றவண்ணமுமென்க. இது

மயக்கவிரணிறை. உச்சிமீமிசையென ஒருபொருட்பன்மொழி சிறப்பின்கண் வந்தன.

௫௨ - ௫௩. என்கண் காட்டென் றென்னுளங் கவற்ற
வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்

இ - ள். இங்ஙனமாகிய இரண்டுவண்ணத்தையும் காட்டுவாயாகவென்று என் கண் என்னுள்ளத்தைக் கவலைசெய்தலாலே யீண்டுவந்தேன் ; ஆண்டுக் குடகமலைப் பக்கத்து மாங்காடென்னுமூரின்கண் உள்ளவன் நானென்றானென்க.

என்கண் - எழுவாய். *"கண்ணுந் தோளும்" என்பதனாற் கண்ணென்றார். உள்ளேன் - உள்ளவனான்.

௫௪ - ௫௭. தென்னவ னாட்டுச் சிறப்புஞ் செய்கையுங்
கண்மணி குளிர்ப்பக் கண்டே னாதலின்
வாழ்த்திவந் திருந்தே னிதுவென் வரவெனத்
தீத்திறம் புரிந்தோன் செப்பக் கேட்டு

இ - ள். அத்தென்னவனுடைய நாட்டினுள்ளசிறப்பும், அவன் கொடை அளிமுதலிய செய்கைகளும் கேட்டலன்றிக் கண்கள்குளிரக் கண்டேனாகலான், அவன் புகழை நாவால்வாழ்த்தி வந்திருந்தேன் ; என்வரவு இதுவென்றுகொண்டு முத்தீயின்றிறத்து மனம்புரிந்தோன் சொல்லக்கேட்டென்க.

௫௮ - ௫௯. மாமறை முதல்வ மதுரைச் செந்நெறி
கூறு நீயெனக் கோவல னுரைக்கும்

இ - ள். கோவலன் பெரிய மறைமுதல்வனே, அதுநிற்க ; மதுரைக்குச்செல்லும் செவ்வியநெறியை எங்கட்குக் கூறுவாயாகவென, அவற்கு அவன் இதனைக் கூறுமென்க.

அது மேற்கூறுவார் :

௬௦ - ௬௭. கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்திய லிழந்த வியனிலம் போல
வேனிற் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
றானலந் திருகத் தன்மையிற் குன்றி
முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளுங்
காலை யெய்தினிர் காரிகை தன்னுடன்

இ - ள். வன்கண்மையன்றிக் குடியோம்பாத அமைச்சரோடே, நாடோறும் காடி முறைசெய்யாது அரசனுங்கோல்கோடலானே, அரசியலிழந்த அகன்றநிலம் போல முதிர்ந்த வேனிலாகிய உரிய அமைச்சனோடே வெவ்விய விளக்கத்தோடே யமைந்த †வேந்தன்றானும் வெம்மைமிகுதலானே தமது இயற்கைகெட்டு முல்லை

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௫௧.

† வேந்தன் - சூரியன்.

குறிஞ்சியென்னும் இருதிணையும் முறைமைதிரிந்து தமது நல்லியல்பையிழந்து தம்மைச் சேர்ந்தோரை நடுங்குந்துயரையுறுவித்துப் பாலையென்பதோர் வடிவைக் கொள்ளும் இந்தக்காலத்து இக்காரிகையோடு வந்தீர்நீரென்றானென்க.

பாலைக்கு நிலமின்மையும் முல்லையும் குறிஞ்சியும் இனிப் பாலையாதலும் முன்னர்ப் பதிகச்செய்யுளுரையிற் கூறப்பட்டன. அன்றியும், *"வான மூர்ந்த வயங்கொளி மண்டில, நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட், டிலையில மலர்ந்த முகையி லிலவம்" என முல்லை முறைமைதிரிந்து பாலையாயினவாறும், †"சீறருங் கணிச்சியோன்... ... ...வரைபிளந் தியங்குந, ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை" எனக் குறிஞ்சி முறைமைதிரிந்து பாலையாயினவாறுங்காண்க.

கோடி இழந்த நிலம்போலக் கிழவனொடு வேந்தன்றிருகக் குன்றித் திரிந்து இழந்து உறுத்துக் கொள்ளுங்காலையெனக்கூட்டுக. காரிகை தன்னுடன் கானை யெய்தினிரென மாறுக. கானை - கானம்.

காஅ - எங. அறையும் பொறையு மாரிடை மயக்கமு
நிறைநீர் வேலியு முறைபடக் கிடந்தவிந்
நெடும்பே ரத்த நீந்திச் சென்று
கொடும்பை நெடுங்குளக் கோட்டகம் புக்கா
பிறைமுடிக் கண்ணிப் பெரியோ னேந்திய
வறைவாய்ச் சூலத் தருநெறி கவர்கவும்

இ - ள். பாறையும் துறுகலும் அருவழியின் நெறிமயக்கமும் பேய்த்தேரு மென்னுமிவை அடைவுபடக்கிடந்த இந்தத் தொலையாத பெரிய சுரத்துநெறியைத் தொலைத்துப்போய்க் கொடும்பாளூர் நெடுங்குளமென்னும் இரண்டூர்க்கும் பொது

* அகநானூறு, களிற்றியானைநிரை, கக: "வான மூர்ந்த வயங்கொளி மண்டில, நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட், டிலையில மலர்ந்த முகையி லிலவங், கலிகொ ளாய மலிபு தொகுபெடுத்த, வஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றுங், கயந்துக ளாகிய பயந்தபு கான, மெம்மொடு கழிந்தன ராயிற் கம்மென, வைப்புவிரிந் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப், படுசினை தாழ்ந்த பயிலிண ரெக்கர், மெய்புகு வன்ன கைகவர் முயக்க, மவரும் பெறுகுவர் மன்னே நயவர, நீர்வார் நிகர்மலர் கடுப்ப வோமறந், தறுகுள நிறைக்குந போல வல்கலு, மழுதன் மேவல வாகிப், பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே" என்பது தலைமகன் பொருள்வயிற் பிரிந்த விடத்து ஆற்றாளாய தலைமகளது வேறுபாடுகண்டு ஆற்றாளாயதோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பதுபடச்சொல்லியது; ஔவையார்.

† கலித்தொகை, முதலாவதுபாலை, க. "தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக, வடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின், மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ யவுணரைக், கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு, முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற், சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி, லேறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந் தியங்குந, ராறுகெட் விலங்கிய வழலவி ராரிடை, மறப்பருங் காத லிவளீண் டொழிய, விறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய"

வாகிய எரியினது கனையைக் கழிந்துசென்றால் முடிக்குப் பிறையைக் கண்ணியாகச்சூடிய இறைவனேந்திய கண்ணறையாகிய வாயையுடைய சூலவேல்போல மூன்றுவழி அறிதற்கரியவாம்படி கவர்க்குமென்றானென்க.

பொறையைப் பொத்தையென்பாருமுளர், ஆவது மட்சிறுமலை. ஆரிடை - அரியவழி; ஆவது ஆறலைப்போரும் ஊறுசெய்விலங்குமுடைத்தாய் ஏற்றிழிவும் கவலைச்சின்னெறியுமாயிருப்பது. நிறைநீர்வேலியென்றார், பேய்த்தேரை; நீர் போலத்தோன்றுதலின். உடைகுளங்களுமாம். இவை இணைப்பெயர்பெற்றவூர். இனிக் கொடும்பைக்கோட்டகநெடுங்குளமெனவுமாம். கோட்டகம் - கரை; பள்ளமுமாம். நீந்திப் புகவரிதென்பதுதோன்றப் புக்காலென்றார். சூலத்து - சூலம் போல; சாரியை நிற்க உருபும் உவமவுருபும் தொக்கன.

எச. வலம்படக் கிடந்த வழிநீர் துணிமின்

இ - ள். அங்ஙனம் கவலைப்படுநெறியினுள் வலப்பக்கத்ததாய்க் கிடந்தவழியில் நீர் போகத்துணிவீராயினென்றானென்க.

நெறியருமைகூறினான்.

எ௫ - அசு. அலர்தலை மராஅமு முலறுதலை யோமையும
பொரியரை யுழிஞ்சிலும் புன்முளி மூங்கிலும
வரிமரற் றிரங்கிய கரிபுறக் கிடக்கையு
நீர்நசை இ வேட்கையின் மானின்று விளிக்குங
கானமு மெயினர் கடமுங் கடந்தா
லைவன வெண்ணெலு மறைக்கட் கரும்புங்
கொய்பூந் தினையுங் கொழும்புன வரகுங
காயமு மஞ்சளு மாய்கொடிக் கவலையும
வாழையுங் கமுகுந் தாழ்குலைத் தெங்கு
மாவும பலாவுஞ் சூழடுத் தோங்கிய
தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்று
மம்மலை வலங்கொண் டகன்பதிச் செல்லுமின்

இ - ள். விரிந்த தலைகளையுடைய வெண்கடம்பும், உலறிய தலைகளையுடைய ஓமையும் பொரிந்த தாளையுடைய வாகையும், தண்டுருளிந்த பறக்காழாகிய மூங்கிலும், வரியையுடையமரல் நீர்வற்றித் திரங்கிய கரிந்துகிடக்கின்றவிடங்களும், அவ்விடத்தே நீருண்டலைவிருப்பி அவ்விருப்பத்தாலே உழைமான் நின்று உளைக்குங் காடும், எயினருறையடுத்தவழியுமாகியவவை கடத்தற்கரிய; அவற்றைக்கடந்து போனால், அவ்விடத்து மலைச்சாரலில்விளையும் நெற்பயிரும் முறிக்கும்பருவத்தைத் தன்னிடத்துடைய கரும்பும் கொய்யும்பருவத்தையுடைய தினையும் வளவிய புனத்தில்விளைந்த வரகும் வெள்ளுள்ளியும் மஞ்சளும் அழகியகொடியையுடைய கவலையும் தலைதாழ்ந்த குலையையுடைய வாழையும் கமுகும் தெங்கும் மாவும் பலாவுமென்னுமிவை தனக்குச் சுற்றெங்கும் சூழப்பட்டு ஓங்கிய தென்னனுடைய சிறுமலையென்னும் பெயரையுடைய மலை விளங்கித்தோன்றும்; அம்மலையை வலப்பக்கத்துக்கொண்டு இடப்பக்கத்து நெறியிற்சென்று மதுரையிற்புகுமினென்றானென்க.

* உலறுதல் - தலைமுளிதல. உழிஞ்சில் - உன்னமுமாம். புல் - புறக்காழ். வரிமரற்றிரங்கியவென்பதற்கு விலங்கு சுவைத்தலால் திரங்கியவென்றுமாம்; †"மரையா மரல்கவர" என்றாராகலின். எயினர் - மறவர். அறைக்கண் - வரைந்தகண்ணுமாம். பூந்தினை - பொலிவினையுடையதினை. காயம் - வெள்ளுள்ளி சிறுமலை - பெயர். அகன்பதி - மதுரை.

அஎ - கூஉ. அவ்வழிப் படரீ ராயி னிடத்துச்
செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றுந்
தடந்தாழ் வயலொடு தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவி ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண்டு

இ - ள். அங்ஙனமாகிய வலப்பக்கத்துநெறியைப் போகீராயின் இடப்பக்கத்துச் சிறையையுடையவண்டுகள் செவ்வழியாழ்ப்பண்ணினைப்பாடும் தாழ்ந்த தடத்தோடும் தாழ்ந்தவயலோடும் குளிர்ந்தபூங்காவினோடும் அருஞ்சுரங்கள் பலவும் இடைக்கிடந்த காட்டுநெறியையுங்கழிந்து திருமால்குன்றத்துச் செல்லக்கடவீராயின், அவ்விடத்தே மிக்க மயக்கத்தைக்கெடுக்கும் பிலத்துநெறியுண்டென்றானென்க.

திருமால்குன்றம் - அழகர்திருமலை.

கூஉ. ஆங்கு—இ - ள். அப்பிலத்துக்குள்ளே,

கூங - கூஎ. விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்
புண்ணிய சரவணம் பவகா ரணியோ
டிட்ட சித்தி யெனும்பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள

இ - ள். தேவர்களாலேத்தப்படுதலில் யாவரும் வியக்கத்தகும் மரபினையுடைய புண்ணியசரவணம் பவகாரணி இட்டசித்தியென்னும்பெயர் எங்கும் பரக்கப்பட்டு இடையறாத சிறப்பினையுடையவாய்த் தம்மிற்சேர்ந்திருக்கின்ற மூன்றுபொய்கைகளுளவென்றானென்க.

கூஎ. ஆங்கு—இ - ள். அவற்றுள்,

கூஅ - கூகூ. புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்

இ - ள். புண்ணியசரவணமென்றுநின்ற பொய்கையின் ஆடுவீராயின் இந்திரனாற்செய்யப்பட்ட ஐந்திரவியாகரணமென்னும் இலக்கணத்தை உணர்வீரென்றானென்க.

* அலறுதலெனவும் பிரதிபேதமுண்டு.
† கலித்தொகை, முதலாவது பாலை, ௫.

இது நினைவின்றிப் பெறும்பேறு. பொருந்துதல் - ஆடுதல். எய்துதல் - உணர்தல்.

கoo - கoக. பவகா ரணிபடிந் தாடுவி ராயிற்
பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவிர்

இ - ள். அதுவன்றிப் பவகாரணியென்னும் பொய்கைக்கண் ஆடுவீராயின் இப்பிறப்பிற்குக் காரணமாகிய பழம்பிறப்பையுணர்வீரென்றுனென்க.

முன்னும்பின்னுமாகிய இருபிறப்பையும் உய்த்துணர்தற்குக் காரணமாகிய இப்பிறப்பிலே எப்பிறப்பையும் எய்தவுணர்வீரென்றுனெனினுமமையும். இனிப் பவமென்பதனை விகாரமாக்கிப் பாவத்தான்வரும்பிறப்புக்களையெனவுமாம்.

கoஉ - கoரு. இட்ட சித்தி யெய்துவி ராயி
னிட்ட சித்தி யெயதுவிர் நீரே

இ - ள். அதுவன்றி இட்டசித்தியென்னும் பொய்கையின் ஆடுவீராயின் நீர் நினைத்தவெல்லாம் எய்துதலையுடையீரென்றுனென்க.

இனி எண்வகைச்சித்திகளையும் தவஞ்செய்து வருந்திப்பெறுமல் நினைத்துழிப் பெறுவீரென்றுனெனினுமமையும்.

கoச. ஆங்குப் பிலம்புக வேண்டுதி ராயின்

இ - ள். அங்ஙனமாகிய அப்பிலத்துக்கட்புகுதலை விரும்புவீராயினென்று

கoரு - கoஎ. ஓங்குயர் மலையத் துயர்ந்தோற் றொழுது
சிந்தையி லவன்றன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தால்

இ - ள். மிகவுமுயர்ந்த அத்திருமலைக்கணுள்ள பெரியோன்சேவடிகளைக் கையாற்றொழுது மனத்தானினைந்து வாக்காற்றுதித்தலுடனே அம்மலையை மும்முறை வலஞ்செய்தாலென்க.

அத்து - சாரியை. வைத்தல் - நினைத்தல்=தியானம். வந்தனை - எண்டுத் துதித்தல். தொழுது வைத்து வந்தனையோடு வலஞ்செய்தாலென்க.

கoஅ - கக. நிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலைப்
பொலங்கொடி மின்னிற் புயலைங் கூந்தற்
கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி

இ - ள். பாதாளகங்கைக்கு மேலுள்ள நிலம் கூறுபடும்படி அறுத்துத் தாழ்ந்த *சிலம்பாறென்னும் அகற்சியையுடைய ஆற்றினது கரைக்கண்ணதாகிய விளக்கத்தையுடைய முகைகளவிழ்ந்த மலரையுடையதோர் கோங்கினிழற்கண்ணே ஓர் பொற்கொடிபோலவும் மின்போலவும் புயல்போலும் ஐவகைக்கூந்தலையும் வளைந்த தொடிபுனைந்த தோளினையுமுடையாளொருத்தி தோன்றியென்க.

---

* சிலம்பாற்றினை நூபுரகங்கையென்பர்.

சிலம்பாறு - அவ்வியாற்றின்பெயர். தலை - இடம். இன் - உவமவுருபு. கன்னிகாரம் - கோங்கு. தொடி - வளைவு ஒருத்தி - ஓரியக்கி.

ககஉ-ககஎ. இம்மைக் கின்பமு மறுமைக் கின்பமு
மிம்மையு மறுமையு மிரண்டு மின்றியோர்
செம்மையி னிற்பதுஞ் செப்புமி னீயிரிவ்
வரைத்தாள் வாழ்வேன் வரோத்தமை யென்பே
னுரைத்தார்க் குரியே னுரைத்தீ ராயிற்
றிருத்தக மாக்குத் திறந்தேன் கதவெனும்

இ - ள் அங்ஙனம் தோன்றினவள் இப்பிறப்பிற்கின்பமும் மறுபிறப்பிற்கின்பமும் இவையிரண்டுமொழிந்து எக்காலத்தும் ஒன்றாந்தன்மையாய்க் கோட்டமின்றி அழிவறநிற்குமின்பமுமாகியபொருள்கள் யாவை? அவற்றை நீயிருரைமின்; யான் இத்*தாள்வரைக்கண்ணே வாழ்வேன்; வரோத்தமையென்று கூறப்படுவேன்; யான் வினாய இவற்றை உரைத்தாருளராயின், அவர்க்கு எத்தொழிற்குமுரியேன்; ஆதலின், திருத்தக்கீர், உரைத்தீராயின், உமக்கு இப்பொழுதே இப்பிலவாயிற்கதவம் திறந்துதருவேனென்று சொல்லுமென்றானென்க.

இம்மைக்கின்பம் - புகழ்; மறுமைக்கின்பம் - புண்ணியம்; செம்மையினிற்பது - மோக்கம். இனி, ஒருவர்க்கு இம்மைமறுமைகட்கு இன்பத்தைத்தந்து பூமியுள்ளளவும் நிற்பதுமாவது புகழ்; †"ஒன்றா வுலகத் . . தொன்றில்" எனவும், ‡"இவணிசை யுடையோர்க் கல்ல தவண, துயர்நிலை யுலகத் துறையு ளின்மை, விளங்கக் கேட்ட மாறுசொல்" எனவுங்கூறினாராகலின் கதவந்திறத்தற்குரியேனெனவுமாம் திறந்தேன் - காலமயக்கம், விரைபொருட்கண்வந்தது.

* அடிமலையைப் பாதசைலமென்று வடநூலார் கூறுதலின், தாள்வரையென்றார். தாழ்வரையென்றும் பிரதிபேதமுண்டு.

† திருக்குறள், புகழ், கூ "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்."

‡ புறநானூறு, ருo:—"மாசற விசித்த வாருறு வள்பின், மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை, யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார், பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக், குருதி வேட்கை யுருகெழு முரசம், மண்ணி வாரா வளவை யெண்ணெய், நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை, யறியா தேறிய வென்னைத் தெறுவர, லிருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை, யதூஉஞ் சாலுமற் றமிழ்முழு தறித, லதனொடு மமையா தணுக வந்துநின், மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென, வீசி யோயே வியலிடங் கமழ, விவணிசை யுடையோர்க் கல்ல தவண, துயர்நிலை யுலகத் துறையு ளின்மை, விளங்கக் கேட்ட மாறுகொல், வலம்படு குரிசினீ யீங்கிது செயலே." திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி. சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, முரசுகட்டிலறியாதேறிய மோசிகீரனைத் தவறுசெய்யாது அவன்றுயிலெழுந்துணையும் கவரிகொண்டுவீசியானை மோசிகீரனார்பாடியது. [இப்பாட்டே இந்திரவிழவூரெடுத்தகாதையில் முரசுகாட்டோடற்கு உதாரணமாக அடியார்க்குநல்லாராற்காட்டப்பட்டது; [கூகூஅ - ம் பக்கம், கஉ - ம் வரியிற்காண்க.]

ககஅ-கஉ௩. கதவந் திறந்தவள் காட்டிய நன்னெறிப்
புதவம் பலவுள போகிடை கழியன
வொட்டுப் புதவமொன் றுண்டத னும்பர்
வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
யிறுதியி லின்ப மெனக்கீங் குரைத்தாற்
பெறுதிர் போலுநீர் பேணிய பொருளெனும்

இ - ள். அவருரைப்பின், அவள் கதவைத்திறந்து இதுவென்றுகாட்டிய நல்ல வழியில்நீண்ட இடைகழிவாயில்கள் பலவுள, அவைகழிந்தால இரட்டைக்கதவை யுடையதோர் வாயிலொன்றுண்டு; அதற்கு மேலாகச்சென்றால் வட்டிகையிலே யெழுதின பாவைபோல்வாளொருத்தி வெளிப்பட்டு ஈறில்லாத இன்பம் யாது? அதனை உரைத்திராயின் நீயிர் இம்முப்பொருளினும் விரும்பியபொருளைப் பெறுவீ ரென்னுமென்றானென்க.

புதவம் - வாயில். போகு - நெடுமை. ஒட்டுப்புதவம் - இரட்டைக்கதவம். உம்பர் - மேல். பூங்கொடி - உவமப்பெயர். அன்றித் துவாரவட்டிகையிற் பூங் கொடி அங்ஙனங்கேட்குமெனவுமாம். இறுதியிலின்பம் - வீடு. பெறுதிர - முன் னிலைப்பன்மை. போலி - ஒப்பில்போலி.

கஉச-கஉரு. உரையீ ராயினு முறுகண் செய்யே
னெடுவழிப் புறத்து நீக்குவ னும்மெனும்

இ - ள். வினையவள், யான்வினையதனை நும்பேதைமையான் உரையீராயினும் நும்மை வருத்தஞ்செய்யேன்; நீர் போகக்கடவ நெடுநெறிக்கண்ணே நும்மைப் போக்குவலென்னுமென்றானென்க.

கஉசா-கஉஎ. உரைத்தா ருளரெனி னுரைத்த மூன்றின்
கரைப்படுத் தாங்குக் காட்டினள் பெயரும

இ - ள். அவள் அங்ஙனங்கேட்டபொருளை உரைத்தாருளராயின், முற்கூறப் பட்டபொய்கைமூன்றின்கரைக்கட்செலுத்தி அவை இவையெனறுகாட்டி மீளு மென்றானென்க.

ஆங்கு - அசை.

கஉஅ-க௩உ. அருமறை மருங்கி னைந்தினு மெட்டினும
வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டு
மொருமுறை யாக வுளங்கொண் டோதி
வேண்டிய தொன்றின் விரும்பினி ராடிற்
காண்டகு மரபின வல்ல மற்றவை

இ - ள். ஓதவும் உணரவுமரிய மறையிடத்தனவாகிய ஐந்தானும் எட்டானும் வருமுறைமைப்பட்ட எழுத்தினையுடைய *மந்திரமிரண்டையும் ஒருதன்மையாக

* மந்திரமிரண்டையும் முறையே பஞ்சாக்கரமென்றும், அட்டாக்கரமென் றுங்கூறுவர் அரும்பதவுரையாசிரியர்.

மனத்தானினைந்து வாக்காற்றுதித்தது அவற்றுள் வேண்டியதியாதொன்று அதனில் விரும்பினீராயாடின், அவற்றின்பயனுயவை தவங்களைச்செய்தோர்க்கும் காணத் தகும் மரபினையுடையவல்லவென்றுனென்க.

இனி, அங்ஙனமாகிய பொய்கைகளின்பயனை விரும்பினீராய் ஒன்றினுடின் அதன்பயனை நுகர்ந்தநெஞ்சம் பிறிதொன்றினையும் காதலியாதென்றுமாம். இன்னும் மற்றவை காண்டகுமரபினவல்லவென்பதற்கு இவைவொழிந்ததீர்த்தங்கள் இவைபோலக் கைமேற் காணத்தகும் மரபினையுடையவல்லவெனினுமமையும்.

கருரு-கருஅ. மற்றவை நினையாது மலைமிசை நின்றோன்
பொற்று மரைத்தா ளுள்ளம் பொருந்துமி
னுள்ளம் பொருந்துவி ராயின் மற்றவன்
புள்ளணி நீள்கொடி புணர்நிலை தோன்றுந்
தோன்றிய பின்னவன் றுணைமலர்த் தாளிணை
யேன்று துயர் கெடுக்கும்

இ - ள். அங்ஙனமாகிய பொய்கைகளின்பயனை விரும்பீராயின், அவற்றை நினையாதே அம்மலைமீதுநின்றோனுடைய பொலிவுபொருந்திய தாமரைமலர்போலும் தாள்களைநினைமின்கள்; அங்ஙனநினைப்பீராயின், அப்பொழுதே அவனது கருடப்புள்ளெழுதிய கொடித்தண்டு பொருந்திநிற்குநிலையிடத்தைக் காண்பீர்; கண்டவளவிலே அவன்றிருவடிநிலை நும்மை எடுத்துக்கொண்டு பிறவித்துன்பத்தைக் கெடுக்குமென்றுனென்க.

நீயிர் ஆண்டுச்சென்று அதுகாண்பீரென்பான் தோன்றுமென்றுன். கெடுக்கும் - முற்று.

கருஅ-கருகூ. இன்ப மெய்தி
மாண்புடை மரபின் மதுரைக் கேகுமின்

இ - ள். அங்ஙனம் அதுகாண்டலிற் பின்னர்ப் பரமபதத்திற்குச்சேறலுமெய்யென்று இன்பமெய்தி மாட்சிமைபொருந்திய மரபினையுடைய மதுரைக்குச் சென்மின்களென்றுனென்க.

கசo. காண்டகு பிலத்தின் காட்சி யீது

இ - ள். கண்கூடாகக் காணத்தகும் பிலத்தின்றன்மை இத்தன்மையாயிருக்குமென்றுனென்க.

கசo-கசகூ. ஆங்
கந்நெறிப் படரீ ராயி னிடையது
செந்நெறி யாகுந் தேம்பொழி லுடுத்த
வூரிடை யிட்ட காடுபல கடந்தா
லாரிடை யுண்டோ ராரஞர்த் தெய்வ
நடுக்கஞ் சாலா நயத்திற் றேன்றி
யிடுக்கண் செய்யா தியங்குநர்த் தாங்கு
மடுத்துடன் கிடக்கு மதுரைப பெருவழி

நீணிலங் கடந்த நெடுமுடி யண்ண
ற்றாடொழு தகையேன் போகுவல் யானென

இ - ள். அத்தன்மையவாகிய இரண்டு பக்கவழிகளிற் போகிராயின், இடைப்பட்டநெறி செவ்வியநெறி, அதனிடத்து இனிய பொழில்சூழ்ந்த ஊரும் ஊர்களை இடையிட்ட பலகாடுங்கடந்தாற் கடத்தற்கரியதோர் மிக்கவழிக்கண் மிக்க துயரைத்தருவதோர் தெய்வமுண்டு, அத்தெய்வந்தோன்றி வழிப்போவாரை இடுக்கண் செய்யாது; செய்வதியாதெனின், நடுக்கஞ்சாலாநயத்தாலே போவாரபோக்கைத் தடுக்கும், அங்ஙனமாகிய அதனைத்தப்பின், அப்பெருவழி போவாராயாவர்க்கும் முகஞ்செய்துகிடக்கும், ஆதலால் நீயிருஞ்சென்மின, யானும் நிலங்கடந்த நெடுமுடியண்ணறாள்களைத் தொழுதகையையுடையேனாகவிற் போகுவலென்னவெனக.

தாங்கும் - தடுக்கும். மடுத்துடன்கிடக்கும் - இம்மூன்றுவழியும் ஒருபடிப்பட முகஞ்செய்துகிடக்குமெனினுமமையும்.

௧௫௦-௧௫௧. மாமறை யோன்வாய் வழித்திறங் கேட்ட
காவுந்தி யையையோர் கட்டுரை சொல்லும்

இ - ள். அங்ஙனம்போகுவலென்ற முதுமறையோன்வாக்கால் வழியின்றிறங்களைக்கேட்ட கவுந்தியடிகள் ஓர்பொருள்பொதிந்தவுரையை உரைக்கும், அஃதியாதெனின்,—

௧௫௨-௧௬௪. நலம்புரி கொள்கை நான்மறை யாள
பிலம்புக வேண்டும் பெற்றிய தில்லை
கப்பத் திந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட் டியற்கை விளக்கக் காணாய்
இறந்த பிறப்பி னெய்திய வெல்லாம்
பிறந்த பிறப்பிற் காணா யோநீ
வாய்மையின் வழாது மன்னுயி ரோம்புநர்க்
கியாவது முண்டோ வெய்தா வரும்பொருள்
காமுறு தெய்வங் கண்டடி பணிய
நீபோ யாங்களு நீணெறிப் படர்குது
மென்றம் மறையோற் கிசைமொழி யுணர்த்திக்
குன்றாக் கொள்கைக் கோவலன் றன்னுட
னன்றைப் பகலோ ரரும்பதித் தங்கி

இ - ள் நல்லொழுக்கத்தைப்புரிந்த கோட்பாட்டையுடைய மறைவல்லவனே, தேவர்களினும்வைத்து ஆயுக்கற்பத்தினை மிகவுடைய இந்திரனேற்றுவித்த வியாகரணத்தினை எம்முடைய அருககுமரனருளிச்செய்த பரமாகமங்களிற் காணகினறிலையோ, அஃதுளதாக, நின புண்ணியசரவணம்பொருந்துதல்வேண்டா, அஃதன்றி முற்பிறப்பிற்செய்தவற்றை இப்பிறப்பிற் காணகின்றிலையோ, ஆகலான் பவகாரணி படியவேண்டா; அஃதன்றி வாய்மையுங் கொல்லாமையுமென்னும் இரண்டினையும் வழுவாதோம்புவார்க்குக் கைகூடாதிருக்கும்பொருள் யாவது

மில்லை ; ஆகலின், நின் இட்டசித்தியெய்துதல்வேண்டா ; இவை இங்ஙனம்பெறு தலின், பிலம்புகவேண்டுமுறைமை எங்கட்கில்லைகாண் ; நீ காமுற்றுவந்ததெய்வத் தைச் சென்று கண்டு அடிபணிதற்குப் போவாயாக ; யாங்களும் எங்கட்கு ஏற்ற நெறியே செல்வோமென்று அந்தமறையோனுக்குப் பொருந்துவனவாகிய மொழி களையுணர்த்திக் குன்றாத ஒழுக்கத்தினையுடைய கோவலனுடனே அற்றைநாள் தங்குதற்கரியதோர் பதியிற்றங்கியென்க.

நலம்புரிகொள்கை நான்மறையாள - இகழ்ச்சி. கற்பமென்பதனைப் பிராகிருதத் தாற் கப்பமென்றார். தேவர்களிடைச்சென்று கற்பிக்குமிந்திரனென்றுமாம். மெய்ப் பாட்டியற்கை - பரமாகமம். அதில் ஐந்திரவியாகரணங்காணலாம். நாலினை யென்னுமுருபு தொக்கது. இந்தப்பிறப்பில்நுகர்வன முற்பிறப்பிற்புரிந்த வினைப் பயனென்பது கருத்து. 'வாய்மை...பொருள்.'— *"யாமெய்யா ... ...பிற" என வும், †"கொல்லான் ... ... ... தொழும்" எனவும் உட்கொண்டவாறெனக்கொள்க. இனிக் காமுறுதெய்வம் - காமமுறுந்தெய்வம் ; எனவே காமக் குரோதாதிகளெல் லாமுடைய தெய்வமென்பதூஉமாயிற்று ; கண்டு - கண்டுவைத்துமென்க.

௧௬௫-௧௭0. பின்றையு மவ்வழிப் பெயர்ந்துசெல் வழிநாட்
கருந்தடங் கண்ணியுங் கவுந்தி யடிகளும்
வருந்துசெல் வருத்தத்து வழிமருங் கிருப்ப
விடைநெறிக் கிடந்த வியவுக்கொண் மருங்கிற்
புடைநெறிப் போயோர் பொய்கையிற் சென்று
நீர்நசை வேட்கையி னெடுந்துறை நிற்ப

இ - ள். முன்னாட்போலப் பின்பும் தங்கி அப்பதியினின்றும் பெயர்ந்துசெல் கின்றபின்னாட் கரிய பெரிய கண்ணையுடையாளும் கவுந்தியடிகளும் வழிநடை வருத்தத்தினாலே வழிப்பக்கத்தேயிராநிற்க, முற்கூறிய இடைநெறிக்கிடந்த செல வைக்கொண்ட பக்கநெறியைக் கடந்துபோய் ஓர்பொய்கைக் கரையிற்சென்று நீரையுண்டல்விரும்பிய வேட்கையோடே கோவலன் ஒரு பெரிய துறையிடத்தே நின்றானாகவென்க.

பின்றை - பின்னை. வழிநாள் - மற்றைநாள். வருந்து - வழி. இடைநெறி - நெறியிடையென்றுமாறினுமமையும். இயவு - செலவு. நீர்நசைவேட்கை - நீர் மேன்மிகவிருப்பம். இது கூறவே பாலைத்திணையின்றன்மைச்சிறப்புமாயிற்று.

௧௭௧-௧௭௫. கானுறை தெய்வங் காதலிற் சென்று
நயந்த காதலி னல்குவ னிவனென
வயந்த மாலை வடிவிற் றோன்றிக்
கொடிநடுக் குற்றது போல வாங்கவ
னடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீ ருகுத்து

இ - ள். அம்மறையோன்கூறிய ஆரணர்த்தெய்வமாகிய வனதெய்வம் தனது காதன்மிகுதியாற் சென்று கூடக்கருதி மாதவிமேல் நயந்தகாதலால் நம்மேல்

* திருக்குறள், வாய்மை, ௧0. † திருக்குறள், புலான்மறுத்தல், ௧0.

இவன் அன்புறுவனென்றெண்ணி அவபோழியாகிய வசந்தமாலையது வடிவைக் கொண்டு வந்து வெளிப்பட்டு ஒருகொடி காற்றால் நடுக்கமுற்றதென்னும்படி அவனுடைய தாளிணைக்கண்ணே வீழ்ந்து பொய்க்கண்ணீரையுகுத்தென்க.

அருங்கண்ணீர் - அன்பின்மையின் உகுத்தமை தோன்ற நின்றது. சென்று தோன்றி வீழ்ந்து உகுத்தென்க.

கஎரு-கஎகூ. வாச மாலையி னெழுதிய மாற்றந்
தீதிலேன் பிழைமொழி செப்பினை யாதலிற்
கோவலன் செய்தான் கொடுமையென் றென்முன்
மாதவி மயங்கி வான்றுய ருற்று

இ - ள். இனி மாதவிகூற்றாகக் கொண்டுகூறுகின்றவள், வாசத்தையுடைய மாலையினெழுதிய ஓலைப்பாசுரத்தில் தவறுடையேனல்லேன், நீகூறிய மாற்றங்களிற் சிலதவறுண்டுபோலும்; அதனானன்றே கோவலன் எனக்குக்கொடுமை செய்தானென்று என்முன்னே மாதவி மயங்கிவீழ்ந்து மிக்கதுயரமுற்றென்க.

க௮0-கஙக. மேலோ ராயினு நூலோ ராயினும்
பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்
பிணியெனக் கொண்டு பிறக்கிட டொழியுங்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்மெனச்
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண
வெண்முத் துதிர்த்து வெண்ணிலாத் திகழுந்
தண்முத் தொருகாழ் தன்கையாற் பரிந்து
துனியுற் றென்னையுந் துறந்தன ளாதலின்
மதுரை மூதூர் மாநகர்ப் போந்தது
தெதிர்வழிப் பட்டோ ரெனக்காங் குரைப்பச
சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்
பாத்தரும் பண்பநின் பணிமொழி யாதென

இ - ள். முனிவரும் கற்றோரும் கல்லாது நன்மைத்தன்மையறிவோரும் இது நெஞ்சையொறுக்கும்பிணியென்று உட்கொண்டு முகம்பாராது விட்டு நீங்கப்பட்ட இப்பொதுமகளிருடைய செய்தொழில் கடையானதொழிலென்று சொல்லித் தனது சிவந்த அரிபரந்த வளவியகடையையுடைய கண்களால் வெண்முத்தத்தைச்சொரிந்து விரும்பி முலைக்குப்பூட்டிய வெள்ளிய நிலாவிளங்கும் குளிர்ந்த தனிமுத்துவடத்தையும்வெறுத்துப் பூட்டிய தன்கையாற்பரிந்து சிந்தித் துறவா வென்னையுந்துறந்தனள், ஆதலான் நீங்கள் மதுரையென்னு மூதூராகிய நகரை நோக்கிப்போந்ததனை வழியிலெதிர்ப்பட்டோர் எனக்குரைத்தலான் *வாணிகச்

* வாணிகச்சாத்து - வாணிகஞ்செய்வோர்திரள்; "சாத்தொடு வழங்குமுல் குடைப் பெருவழி" எனப்பெரும்பாணாற்றுப்படையிலும், "தாளி னூக்குபு சாத்தி னெழுந்தவே" எனச் சிந்தாமணியிலும் கூறினர்.

சாத்தொடுபோந்து தனிமையால யான்றுயருழந்தேன்; பகுத்தலரிய பண்பை யுடையோனே, அதற்கு நீயருளிச்செய்யுமாற்றம் யாதென்றுகேட்பவென்க.

பிறக்கிடுதல் - பின்னிடுதல்; ஆவது முகம்பாராமை. வாழ்க்கை - பொய்த்தொழில். ஏகாரம் - தேற்றம். போன்ம் - போலும். *"செய்யு ளிறுதிப் போலி மொழிவயி, னகார மகார மீரொற் ருகும்" என்பதனாற்கொள்க. மேலோர் - முனிவர். நூலோர் - கற்றோர். பால்வகைதெரிந்தபகுதியோர் - மதிநுட்பமுடையோர்.

க௯உ-உ00. மயக்குந் தெய்வமிவ் வன்காட் டுண்டென
வியந்தகு மறையோன் விளம்பின னாதலின்
வஞ்சம பெயர்க்கு மந்திரத் தாலிவ்
வைஞ்சி லோதியை யறிகுவன் யானெனக்
கோவல னாவிற் கூறிய மந்திரம்
பாய்கலைப் பாவை மந்திர மாதலின்
வனசா ரிணியான் மயக்கஞ் செய்தேன்
புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கு
மென்றிற முரையா தேகென் றேக

இ - ள். இங்ஙனம் இயக்கிநடிக்கக்கண்ட கோவலன் மதியை மயக்குவிக்குந் தெய்வம் இவ் வலிய காட்டினுண்டென்று அம்மறையோன் கூறினானாதலான் மந்திரத்தால் இந்த ஐவகைப்பட்ட சிலவாகிய ஓதியையுடையாளைத் தெய்வமகள் மானிடமகளென்பதறிவேனெனக்கருதி அவன் நாவிற்கூறியமந்திரம் அந்தரிமந்திரமாதலானே, அஞ்சி, யான் இவ்வனத்திற்றிரிகின்றவியக்கி, நின்றனை விரும்புதலான் மயக்கஞ்செய்யப் புக்கேன், யான்செய்த இப்பிழையை நின்மனைவிக்கும் கவுந்தியடிகட்கும் மொழியாது போவாயாகவென்றுசொல்லித் தானும் தன்னிடமே போகவென்க

தவத்தினும் கற்புச்சிறந்ததாகலின், முற்கூறினர். இவர் சாயலும் அறனுமுடையாரேனும் தவறுகண்டுழிக் கணத்தின் வெகுண்டு சவிப்பரென்றஞ்சி அவர்க்கு உரையாதொழியென்று இரந்தாளென்க.

உ0க-உ0உ. தாமரைப் பாசடைத் தண்ணீர் கொணர்ந்தாங்
கயர்வுறு மடந்தை யருந்துயர் தீர்த்து

இ - ள். அங்ஙனம் அவள்போனபின்பு தாமரைப்பொதியுள் தான் அந்தவிடத்திற் குளிர்ந்தநீரைக் கொண்டுசென்று நீர்வேட்கையான் வருத்தமுற்ற மடந்தையது வருத்தத்தைத் தீர்த்தென்க.

உ0௩-உ0௯. மீதுசெல் வெங்கதிர் வெம்மையிற் றொடங்கத்
தீதியல் கானஞ் செலவரி தென்று
கோவலன் றன்னொடுங் கொடுங்குழை மாதொடு
மாதவத் தாட்டியு மயங்கதத ரூவத்து

---

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், மொழிமரபு, கஅ.

இ - ள். எழுகின்றகதிர் வெம்மைசெய்தலைத் தொடங்குதலாலே பாலைத் தன்மைமிகழ்கின்ற இக்கானம் இனி வழிச்சேறற்கு அரிதென்று கோவலனுடனும் வளைந்த மகரக்குழையையுடைய மாதினுடனும் மாதவத்தாட்டியும் வழிமயக்கத்தை யுடைய பாலைநிலப்பரப்பின்கண்ணெனக.

தீதியல்கானம் - தீங்காலியன்றகானமுமாம்.

உ௦எ-உக௬. குரவமு மரவமுங் கோங்கமும் வேங்கையும்
விரவிய பூம்பொழில் விளங்கிய விருக்கை
யாரிடை யத்தத் தியங்குந ரல்லது
மாரி வளம்பெறா வில்லே ருழவர்
கூற்றுறழ் முன்பொடு கொடுவில் லேந்தி
வேற்றுப்புலம் போகிநல் வெற்றங் கொடுத்துக
கழிபே ராண்மைக் கடன்பார்த் திருக்கும்
விழிநுதற் குமரி விண்ணோர் பாவை
மையறு சிறப்பின் வான நாடி
யையைதன் கோட்ட மடைந்தன ராங்கென.

இ - ள். குராவும் வெண்கடம்புங் கோங்கும் வேங்கையும் தம்மிற்றலைமணந்த பொழில்சூழ்ந்த இருப்பிடத்து அரியவழிகளின் இயங்குவார்கைப்பொருளாகிய வளத்தை விரும்பினல்லது மழைவளத்தைவிரும்பாத விற்றொழிலையே உழவு தொழிலாகவுடைய மறவர் கூற்றத்தையொத்த வலியோடே வில்லையேந்திப் பகைவர்முனையிடத்தேபுக, அவர்க்குவென்றியைக்கொடுத்து அதற்கு விலையாகிய மிக்க ஆண்மைத்தன்மையையுடைய அவிப்பலியைத் தான்பெறுதற்கு வழிபார்த் திருக்கும் நெற்றிக்கண்ணையுடையகுமரி, விண்ணோர்பரவும்பாவை, குற்றமற்ற சிறப்பினையுடைய சுவர்க்கநாட்டையுடையாளாகிய ஐயைகோட்டத்தைச் சென் றடைந்தார் அப்பொழுதேயென்க.

போகி - போக. இனிப் போகவெனத்திரியாது ஏந்திப் போகி வெற்றங் கொடுத்துப் பார்த்திருக்குமென்பதும்பொருள். அதற்கு உழவர்க்கென நான்க னுருபு விரிக்க. முன்பொடுவெற்றங்கொடுத்தென்க. மயங்கதராழுவத்து விளங்கிய இருக்கைக்கட் கோட்டமென்க; அஃது ஏந்திப் போகிக் கொடுத்து இருக்கும் குமரி பாவை நாடியாகிய ஐயைகோட்டமென்க. கழிபேராண்மைக்கடன் - தங் னைத்தானிடும்பலிக்கடன். விழிநுதல் - நுதல்விழியென்க.

இஃது, எல்லாவடியும் நேரடியால்முடிதலின், நிலைமண்டிலவாசிரியப்பா.

பருந்து நிழலுமென ... ...அடியார்க்குநல்லானென்பான்.
ஒருந்தமிழ் ... ... ... ...நிரம்பையர்காவலனே.
காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

காடுகாண்காதை முற்றிற்று.

## பன்னிரண்டாவது

# வேட்டுவவரி.



கடுங்கதிர் திருகலி னடுங்களு ரெய்தி
யாறுசெல் வருத்தத்துச் சீறடி சிவப்ப
நறும்பல் கூந்தற் குறும்பல வுயிர்த்தாங்
கையை கோட்டத் தெய்யா வொருசிறை
வருந்துநோய் தணிய விருந்தன ருப்பால்
வழங்குவிற் றடக்கை மறக்குடித் தாயத்துப்
பழங்கட னுற்ற முழங்குவாய்ச் சாலினி
தெய்வ முற்று மெய்ம்மயிர் நிறுத்துக்
கையெடுத் தோச்சிக் கானவர் வியப்ப
இடுமுள் வேலி யெயினர்கூட் டுண்ணு
நடுவூர் மன்றத் தடிபெயர்த் தாடிக்
கல்லென் பேரூர்க் கணநிரை சிறந்தன
வல்வி லெயினர் மன்றுபாழ் பட்டன
மறக்குடித் தாயத்து வழிவளஞ் சுரவா
தறக்குடி போலவிந் தடங்கின ரெயினருங்
கலையமர் செல்வி கடனுணி னல்லது
சிலையமர் வென்றி கொடுப்போ ளல்லண்
மட்டுண் வாழ்க்கை வேண்டுதி ராயிற்
கட்டுண் மாக்கள் கடந்தரு மெனவாங்
கிட்டுத் தலையெண்ணு மெயின ரல்லது
சுட்டுத் தலைபோகாத் தொல்குடிக் குமரியைச்
சிறுவெள் ளரவின் குருளைநாண் சுற்றிக்
குறுநெறிக் கூந்த னெடுமுடி கட்டி
யிளைசூழ் படப்பை யிழுக்கிய வேனத்து
வளைவெண் கோடு பறித்து மற்றது
முளைவெண் டிங்க ளென்னச் சாத்தி
மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற
மாலை வெண்பற் றாலிநிரை பூட்டி
வரியும் புள்ளியு மயங்கு வான்புறத்

துரிவை மேகலை யுடீஇப் பரிவொடு
கருவில் வாங்கிக் கையகத்துக் கொடுத்துத்
திரிதரு கோட்டுக் கலைமே லேற்றிப்
பாவையுங் கிளியுந் தூவி யஞ்சிறைக்
கானக் கோழியு நீனிற மஞ்ஞையும்
பந்துங் கழங்குந் தந்தனர் பரசி
வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
புழுக்கலு நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையு மேவிய விரையு
மேவ லெயிற்றிய ரேந்தினர் பின்வர*
வாறெறி பறையுஞ் சூறைச் சின்னமுங்
கோடின் குழலும் பீடுகெழு மணியுங்
கணங்கொண்டு துவைப்ப வணங்கு முன்னிறீஇ
விலைப்பலி யுண்ணு மலர்பலி பீடிகைக்
கலைப்பரி யூர்தியைக் கைதொழு தேத்தி
யிணைமலர்ச் சீறடி யினைந்தனள் வருந்திக்
கணவனோ டிருந்த மணமலி கூந்தலை
யிவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்
தொருமா மணியா யுலகிற் கோங்கிய
திருமா மணியெனத் தெய்வமுற் றுரைப்ப
பேதுறவு மொழிந்தனண் மூதறி வாட்டியென்
றரும்பெறற் கணவன் பெரும்புறந் தொடுங்கி
விருந்தின் மூர லரும்பின ணிற்ப
மதியின் வெண்டோடு சூடுஞ் சென்னி
நுதல்கிழித்து விழித்த விமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி தவளவா ணகைச்சி
நஞ்சுண்டு கறுத்த கண்டி வெகுள்வினைத்
தரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோ
டுளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி
வளையுடைக் கையிற் சூல மேந்தி
கரியி னுரிவை போர்த்தணங் காகிய
வரியி னுரிவை மேகலை யாட்டி
சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி

* ‘பின்வர’ என்றதன்பின், “மலர்ப்பலிப் பீடிகை நிலைப்பலி செய்தாங்கு” என்று ஓரடி சிலபிரதிகளில் அதிகமாக எழுதப்பட்டுள்ளது.

வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை
யிரண்டுவே றுருவிற் றிரண்டதோ ளவுணன்
றலைமிசை நின்ற தையல் பலர்தொழு
மமரி குமரி கவுரி சமரி
சூலி நீலி மாலவற் கிளங்கிளை
யையை செய்யவள் வெய்யவாட் டடக்கைப்
பாய்கலைப் பாவை பைந்தொடிப் பாவை
யாய்கலைப் பாவை யருங்கலப் பாவை
தமர்தொழ வந்த குமரிக் கோலத்
தமரிளங் குமரியு மருளினள்
வரியுறு செய்கை வாய்ந்ததா லெனவே

*உரைப்பாட்டுமடை.

வேறு.

நாக நாறு நரந்தை நிரந்தன
ஆவு மாரமு மோங்கின வெங்கணுஞ்
சேவு மாவுஞ் செறிந்தன கண்ணுதல்
பாக மாளுடை யாள்பலி முன்றிலே

செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்க்
கொம்பர் நல்லில வங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள் வாழ்சடை யாடிரு முன்றிலே

மரவம் பாதிரி புன்னை மணங்கமழ்
குரவங் கோங்க மலர்ந்தன கொம்பர்மே
லரவ வண்டின மார்த்துட னியாழ்செயுந்
திருவ மாற்கிளை யாடிரு முன்றிலே

வேறு.

†கொற்றவை கொண்ட வணிகொண்டு நின்றவிப்
பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ
பொற்றொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த
விற்றொழில் வேடர் குலனே குலனும்

* பாட்டுமடையென்றும் பிரதிபேதமுண்டு.
† 'கொற்றவை' முதலியமூன்றும் ஆசிரியப்புகழ்தலென்று சில மூலப்பிரதிகளில் எழுதப்பட்டுள்ளன.

ஐயை திருவி னணிகொண்டு நின்றவிப்
பையர வல்கு றவமென்னை கொல்லோ
பையர வல்குல் பிறந்த குடிப்பிறந்த
வெய்வி லெயினர் குலனே குலனும்

பாய்கலைப் பாவை யணிகொண்டு நின்றவிவ்
வாய்தொடி நல்லா டவமென்னை கொல்லோ
வாய்தொடி நல்லாள் பிறந்த குடிப்பிறந்த
வேய்வி லெயினர் குலனே குலனும்

வேறு.

ஆனைத்தோல் போர்த்துப் புலியி னுரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமே னின்றாயால்
வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்

வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
கரிய திரிகோட்டுக் கலைமிசைமே னின்றாயா
லரியரன்பூ மேலோ னகமலர்மேல் மன்னும்
விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்

சங்கமுஞ் சக்கரமுந் தாமரைக்கை யேந்திச
செங்க ணரிமான் சினவிடைமே னின்றாயாற்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை யுருவாய் மறையேதத வேநிற்பாய்

வேறு.

ஆங்குக்,
கொன்றையுந் துளவமுங் குழுமத் தொடுத்த
துன்று மலர்ப்பிணைய றோண்மே லிட்டாங்
கசுரர் வாட வமரர்க் காடிய
குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே

வேறு.

ஆய்பொன் னரிச்சிலம்புஞ் சூடகமு மேகலையு மார்ப்ப வார்ப்ப
மாயஞ்செய் வாளவுணர் வீழநங்கைமரக்கான்மேல்வாளமலையாடும்போலும்
மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கான்மேல் வாளமலை யாடு மாயிற்
காயா மலர்மேனி யேத்தி வானோர் கைபெய் மலர்மாரி காட்டும் போலும்

உட்குடைச் சீறூ ரொருமகனா னிரைகொள்ள வுற்ற காலை
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டும் போலும்

இவை தாழிசை யோசையான்றி யடுக்கிவந்தன. (தொல். செய். ப. 166. ந)

இவை மூன்றடுக்கி முடுகியலாய்வந்த தாழிசைக் கொச்சகவொருபோகு (தொல் செய். ப 165. ந)

வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டின் வேற்றூர்க்
கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்
கள்விலை யாட்டி மறுப்பப் பொறாமறவன் கைவில் லேந்திப்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகும் போலும்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகுங் காலைக்
கொள்ளுங் கொடியெடுத்துக்கொற்றவையுங்கொடுமரமுன்செல்லும்போ [லும்.

வேறு.

இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள்
கொல்லன் றுடியன கொளைபுணர்சீர் வல்ல
நல்லியாழ்ப் பாணரதம் முன்றி னிறைந்தன
முருந்தே ரிளநகை காணாய்நின் னையர்
கரந்தை யலறக் கவர்ந்த நிரைகள்
கள்விலை யாட்டிநல் வேய்தெரி கானவன்
புள்வாய்ப்புச் சொன்னகணி முன்றி னிறைந்தன
கயமலருண் கண்ணாய் காணாய் நின்னைய
ரயலூ ரலற வெறிந்தநல் லானிரை
நயனின் மொழியி னரைமுது தாடி
யெயின ரெயிற்றியர் முன்றி னிறைந்தன

துறைப்பாட்டுமடை.

வேறு.

சுடரொடு திரிதரு முனிவரு மமரரு
மிடர்கெட வருளுநி னிணையடி தொழுதேம்
அடல்வலி யெயினர்நி னடிதொடு கடனிது
மிடறுகு குருதிகொள் விறலவள் விலையே
அணிமுடி யமரர்தம் மரசொடு பணிதரு
மணியுரு வினைநின மலரடி தொழுதேம்
கணநிரை பெறுமவி றெயினிடு கடனிது
நிணனுகு குருதிகொ ளிகரடு விலையே
துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய
வெடிபட வருபவ ரெயினர்க ளரையிருள்
ளடுபுலி யனையவர் குமரிநி னடிதொடு
படுகட னிதுவுகு பலிமுக மடையே

வேறு.

வம்பலர் பல்கி வழியும் வளம்பட
வம்புடை வல்வி லெயினர்கட னுண்குவாய்

சங்கரி யந்தரி நீலி சடாமுடிச்
செங்க ணரவு பிறையுடன் சேர்த்துவாய்

துண்ணென் றுடியொடு துஞ்சு றெறிதரு
கண்ணி லெயின ரிடுகட னுண்குவாய
விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ வொருவரு
முண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்

பொருள்கொண்டு புண்செயி னல்லதை யார்க்கு
மருளி லெயின ரிடுகட னுண்குவாய்
மருதி னடந்துநின் மாமன்செய் வஞ்ச
வுருளுஞ் சகட முதைத்தருள் செய்குவாய்

வேறு.

மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன் பிறர்நாட்டுக்
கட்சியுங் கரந்தையும் பாழ்பட
வெட்சி சூடுக விறல்வெய் யோனே

---

க. கடுங்கதிர் திருகலின்—இ - ள். அங்ஙனமடைந்தவர் வெங்கதிர் முறுகுதலாலே,

தண்கதிருமுண்டாதலின், வெங்கதிரென்பதுதோன்றக் கடுங்கதிரென்றார்.

க - ரு. நடுங்கஞ ரெய்தி
யாறுசெல் வருத்தத்துச் சீறடி சிவப்ப
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்தாங்
கையை கோட்டத் தெய்யா வொருசிறை
வருந்துநோய் தணிய விருந்தன ள்

இ - ள். நறிய பலவகைக்கூந்தலையுடையாள், கடுங்கதிர் அங்ஙனமுறுகுதலின் வெம்மைவிளைக்கும் பாலைத்தன்மையையுடைய நெறியைச்செல்லுதலால் நடுங்குதற்குக்காரணமான அஞரெய்தி மெய்வருத்தத்தோடே அடிகள் கொப்புளங்கோடலின் வல்லாநடையோடும் பலகாலுயிர்த்தலின், மேற்செல்லாராய் நோய்தணிய அவ்விடத்துளதாகிய முற்கூறிய ஐயை கோட்டத்துப் பலரும்புகுந்தறியாததோர் பக்கத்தே புக்கிருந்தார்களாகவென்க.

ரு. உப்பால்—இ - ள். மேலே,

சா - எ. வழங்குவிற் றடக்கை மறக்குடித் தாயத்துப்
பழங்கட னுற்ற முழங்குவாய்ச் சாலினி

இ - ள். அம்பைவழங்கும் வில்லைக் கையிலேயுடைய மறவர்குடியிற்பிறந்த உரிமையையுடைய சாலினியானவள்,

வன: பாலை குறிஞ்சி மருதம் செவ்வழியென்பன. அவற்றின்றிறங்களாவன பாலைக்குப் புறம் - தேவாளி; அருகு - சீர்கோடிகம்; பெருகு - நாகராகம். குறிஞ்சிக்குப் புறம் - செந்து; அருகு - மண்டிலம்; பெருகு - அரி. மருதத்திற்குப் புறம் - ஆகரி; அருகு - சாயவேளர்கொல்லி; பெருகு - இன்னரம். செவ்வழிக்குப் புறம் - வேளாவளி; அருகு - சீராகம்; பெருகு - சந்தி. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க. இருபெருவீதியாவன: சிறுதனம் பெருந்தனம்.

இத்துணையும் வீதிகளைச் சிறப்பித்துக்கூறி, இனி அங்காடிவீதிகூறுவார், கம்மியர்முதலாயினர் பண்ணிவிற்பன கூறுகின்றார்.

கசுஅ - கஎங. வையமும்... ... ...அங்காடிவீதியும்

கசுஅ. வையமும்—இ - ள். கொல்லாப்பண்டியும்,

கசுஅ. பாண்டிலும்—இ - ள். தேர்வட்டையும்,

கசுஅ. மணித்தேர்க் கொடிஞ்சியும்—இ - ள். அழகிய தேர்மொட்டும்,

கசுகூ. மெய்புகு கவசமும்—இ - ள். மெய்புகுதற்கிடமாகிய கவசமும்,

கசுகூ. வீழ்மணித் தோட்டியும்—இ - ள். விரும்பப்படும் மணிகளழுத்தின அங்குசங்களும்,

கஎ0. அதள்புனை யரணமும்—இ - ள். தோற்கைத்தளமும்,

கஎ0. அரியா யோகமும்—இ - ள். கருவிவிலக்காகப் புனைந்த அரைப்பட்டிகையும்,

அரிதல்செய்யாத யோகமென்க; வியாதிகளைக்கெடுக்கும் மருந்தென்றுமாம்.

கஎக. வளைதரு குழியமும்—இ - ள். கட்டுக்குழியமும்,

கஎக. வால்வெண் கவரியும—இ - ள். மிகவும் வெள்ளிய சாமரமும்,

கஎஉ. ஏனப் படமும்—இ - ள். பன்றிமுகக்கடகும்,

கஎஉ. கிடுகின் படமும்—இ - ள். தோற்கடகும்,

கஎ௩. கானப் படமும—இ - ள். கானமாகியகடகும்,

கானத்துள்ளனவெல்லாம் எழுதுதலிற் கானமாயிற்று.

கஎ௩. காழூன்று கடிகையும்—இ - ள். குத்துக்கோல்களும்,

கஎச. செம்பிற செய்நவும்—இ - ள். செம்பாற்செய்தனவும்,

கஎச. கஞ்சத் தொழிலவும்—இ - ள். கஞ்சத்தாற்செய்தனவும்,

கஎரு. வம்பின் முடிநவும்—இ - ள். புதுமையாக முடிவனவும்,

என்றது அல்லிக்கயிறு குசைக்கயிறு முதலியன; வம்பு - கயிறு.

கஎரு. மாலையிற் புனைநவும—இ - ள். மாலையின்வர்க்கமாகப் புனைவனவும்,

என்றது தூக்குவர்க்கம்; இடையான் மாலைவிசேடங்களாகப் புனைந்துவிற்பனவும் பூமாலைவர்க்கமுமென்ப.

கஎசு. வேதினத் துப்பவும் — இ - ள். ஈர்வாட்டொடக்கத்தனவாகிய கருவிகளும்; துப்பு - கருவி.

கஎசு. கோடுகடை தொழிலவும்— இ-ள். ஆனைக்கோடுமுதலியவற்றைக்கடையும் தொழிற்குரிய கருவிகளும்,

கஎஎ. புனைபவும்— இ-ள் அதிற்புனைக்குறுப்பாயுள்ளனவும்,

அவை "நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை, யார மகிலுறுப்போ டாறு" என்பன.

கஎஎ. சாந்தவும்— இ-ள். மயிர்ச்சாந்துக்கு உறுப்பாயுள்ளனவும்; மெய்ச்சாந்துறுப்புமாம்.

கஎஎ. பூவிற் புனைநவும்— இ-ள். பூவாற்புனையப்படும் மாலைவிசேடங்களாயுள்ளனவும்,

கஎஅ-கஎகூ. வகைதெரி வறியா வளந்தலை மயங்கிய
அரசுவிழை திருவி னங்காடி வீதியும்

இ-ள். இச்சொல்லப்பட்ட வகைகள் இன்னதற்கு இவையெனத் தெரிதற்கரிய இவ்வளங்கள் தலைமயங்கியிருக்கின்ற அரசரும் காணலுறுதுவிரும்பப்படும் செலவத்தையுடைய அங்காடித்தெருவுமெனக.

இங்ஙனம் பெரியகடை ஒருவாற்றாற்கூறி, இரத்தினக்கடையும் பொற்கடையுங்கூறுவார்.

கஅ0-கஅ௩. காக பாதமுங் களங்கமும் விந்துவும்
ரேகையு நீங்கி யியல்பிற் குன்றா
நூலவர் நொடிந்த நுழைநுண் கோடி
நாலவகை வருணத்து நலங்கே ளொளியவும்

இனி அம்மணிகளொன்பதினும் வயிரத்திற்குக் குற்றமுங்குணமுங்கூறுவார்.

இ-ள். நூலோரால் குன்றுதலையுடையவென்று வரைந்துசொல்லப்பட்ட குற்றம் பன்னிரண்டினுள், காகபாதமும் களங்கமும் விந்துவும் ரேகையுமென்னும இக்குற்றங்கள்நான்கும் நீங்கிக் குன்றுவாகிய குணங்களைந்தையும் வருணநான்கினிறங்களையும் இந்திரசாபம்போலும் ஒளியையுமுடைய வயிரச்சாதியும்,

இவற்றுட் குற்றம் பன்னிரண்டாவன: சரைமலம் கீற்று சம்படி பிளத்தல் துளை கரி விந்து காகபாதம் மிருத்து கோடியில்லன கோடிமுரிந்தன தாரைமழுங்கலெனவிவை; "சரைமலங் கீற்றுச் சம்படி பிளத்த, றுளைகரி விந்து காக பாத, மிருத்துக் கோடிக ளிலாதன முரித, றாரை மழுங்க றன்றோ, டீராறும் வயிரத் திழிபென மொழிப" என்றாராகலின். இனிக் குணங்களைந்தாவன: எட்டுப்பலகையும், ஆறுகோடியும், தாரையும், சுத்தியும், தராசமுமெனவிவை; "பலகை யெட்டுங் கோண மாறு, மிலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமும், மைந்துங் குணமென் றறைந்தனர் புலவ, ரிந்திர சாபத் திகலொளி பெறினே" என்றார். நால்வகைவருணத்தொளியாவன: "அந்தணன் வெள்ளை யரசன் சிவப்பு, வந்த வைசியன் பச்சை சூத்திர, னந்தமில் கருமையென் றறைந்தனர் புலவர்." இனி மிக்ககுற்றங்கள் நான்கின் பயனாவன: "காக பாத நாகங் கொல்லும்." "மலம்பிரி யாதது நிலந்தரு கிளைகெடும்." "விந்து சிந்தையிற் சந்தா பந்தரும்" "கீற்று வரலினை யேற்றவர் மாய்

வர்” எனவரும். இனி வருணநான்கின்பயனுவன: “மறையோ னணியின் மறையோ னாகிப், பிறவி யேழும் பிறந்துவாழ் குவரே” “மன்னவ னணியின் மன்னவர் சூழ, வின்றில வேந்த ராவ ரெழுபிறப்பும்” “வணிக னணியின் மணி பொன் மலிந்து, தணிவற வடைந்து தரணியில் வாழ்வர்” “சூத்திர னணியிற் றொகையில் கனகநெல், வாய்ப்ப மன்னி மகிழ்ந்துவாழ் குவரே” எனவரும். ஏகை - இரேகை. இயல்பெனவே பலகை எட்டென்பதூஉம், கோடி ஆறென்பதூஉம் பெறுதும். குன்றுவென்பதனை அருத்தாபத்தியாக்கிக் குன்றுதலையுடைய வெனக் குற்றநான்கிற்குமேற்றுக. நுழைநுண்கோடி - இருபெயரொட்டாய் மிகவும் கூர்த்தகோடியென்பதாயிற்று. ஒளியவெனவே குறிப்பெச்சமாய் வலனென்பாயிற்று.

முன்னர் வலனென்பாகிய வயிரச்சாதிகூறி, இனி அவன் வயிற்றின்புறத்தைக் கொத்திவிழுங்கியகருடன் நகைத்தலானுமிழ, அஃது இமவான்முதலிய பன்மலைகளினும் வீழ்ந்து ஊறிப்பிறத்தலிற் கருடோற்காரமென்றுபெயர்பெற்ற மரகதச்சாதிகூறுவார்.

௧௮௪-௧௮௫. ஏகையு மாலையு மிருளொடு நீங்கித்
பாசார மேனிப் பசுங்கதி ரொளியவும்

இ - ள். ஏகையும் மாலையுமென்னும் குற்றங்களை இருளென்னும் குற்றத் தோடே நீக்கின பசுமைநிறைந்த மெய்யையுடைய பசிய கதிரொளிபரந்த மரகதச் சாதியும்,

இதற்குக்குற்றமெட்டுள: அவை, கருகல் வெள்ளை கல் மணல் கீற்று பரிவு தார் சாயையிறுகுதலெனவிவை; என்னை? “கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்று, பரிவுதார் சாயை யிறுகுதன் மரகதத், தெண்ணிய குற்ற மிவையென மொழிப” என்றாராகலின். இவற்றுள், மிக்க குற்றமுடையன இம்மூன்றுமென்றுணர்க. ஏகை - இரேகை=கீற்று; மாலை - தார்; இருள் - கருகுதல். பாசார் மேனிப் பசுங்கதி ரொளியென்ற மிகையானே குணங்களும் எட்டென்பதேபெறுதும்; “நெய்த்த மயிற்கழுத் தொத்தபைம் பயிரிற், பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல், வக்கி பாய்தல் பொன்வண் டின்வயி, றொத்துத் தெளிதலொ டெட்டுங் குணமே” என்றாராகலினெனக்கொள்க.

௧௮௬-௧௮௭. பதுமமு நீலமும் விந்தமும் படிதமும்
விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்

இ - ள். நூல்களின்விதித்த முறையிற்பிழையாவாய் விளங்கிய பதுமமும் நீலமும் விந்தமும் படிதமுமென்னும் நால்வகைச்சாதி மாணிக்கவருக்கமும்,

விதிமுறைபிழையாவெனவே பிறப்பிடமும், வருணமும், பெயரும், குணமும், குற்றமும், நிறமும், விலையும், பத்தியுமென்னுமிவையும் பிறவுமடங்கின; என்னை? “மாணிக் கத்தியல் வருக்குங் காலைச், சமனொளி சூழ்ந்த விருநான் கிடமு, நால்வகை வருணமு நவின்றவிப் பெயரும், பன்னிரு குணமும் பதினறு குற்றமு, மிருபத் தெண்வகை யிலங்கிய நிறமு, மருவிய விலையும் பத்தி பாய்தலு, மிவை யெனமொழிப வியல்புணர்ந் தோரே” என்றாராகலின். இவற்றுள், பதுமம் - பதுமராகம்; சாதுரங்கமென்பதுமது. நீலம் - நீலகந்தி; சௌகந்தியென்பதுமது.

விந்தம் - குருவிந்தம் ; இரத்தவிந்துவென்பதுமது. படிதம் - கோவாங்கு. என்னை? "வன்னியிற் கிடக்கும் வருணநாற் பெயரு, முன்னிய சாதுரங்க மொளிர்குரு விந் தஞ், சௌகந்தி கோவாங்கு தாறு கும்மே." எ-ம், *"தாமரை கழுநீர் சாதகப் புட் கண், கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு, மாதுளைப் பூவிதை வன்னியீ ரைந்து, மோதுசா தூரங்க வொளியா கும்மே" எ-ம், இலக மூலோத்திரஞ் செம்பருத் திப் பூக், கவிர்மலர் குன்றி முயலுதி ரம்மே, சிந்துரங் குக்கிற் கண்ணென வெட்டு, மெண்ணிய குருவிந்த மன்னிய நிறமே" எ-ம், "கோகிலக்கண் செம்பஞ்சு கொய்ம்மலர்ப் பலாச, மசோகப் பல்லவ மணிமலர்க் குவளை, யிலவத் தலர்களென் ருறு குணமுஞ், சௌகந் திக்குச் சாற்றிய நிறனே" எனவும், "கோவைநற் செங் கல் குராமலர் மஞ்சளெனக், கூறிய நான்குங் கோவாங்கு நிறனே" எனவும் சொன்னார். ஒழிந்தனவும் விரிப்பின், உரைபெருகும் ; வந்தவழிக்கண்டுகொள்க.

கஅரு. பூச வுருவிற் பொலந்தெளித் தனையவும்

இ - ள். பூசத்தினது உருவினையுடைய பொன்னை மாசறத் தெளியவைத்தா லொத்த புருடராகவருக்கமும்,

கஅகூ. தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவும்

இ - ள். குற்றமற்ற ஞாயிற்றொளியெனத் தேன்றுளியெனச் சொல்லப்பட்ட வயிடூரியவருக்கமும்,

ககூ0. இருடெளித் தனையவும் — இ - ள் இருளைத் தெளியவைத்தா லனைய நீலமணிவருக்கமும்,

இதற்குச்சாதிநான்கும் குணம் பதினொன்றும் குற்றம் எட்டுமெனக்கொள்க ; என்னை? "நீலத் தியல்பு நிறக்குங் காலை, நால்வகை வருணமு நண்ணுமா கரமுங், குணம்பதி னொன்றுங் குறையிரு நான்கு, மணிவோர் செயலு மறிந்திசி னோரே" என்றாராகலின். "வெள்ளை சிவப்புப் பச்சை கருமையென், றெண்ணிய நாற் குலத் திலங்கிய நிறமே" "கோகுலக் கழுத்துக் குவளை சுரும்ப, ராகுலக் கண்க ளவிரிச் சாறு, ... ... ... காயா நெய்தல் கனத்தல் பத்தி, பாய்த லெனக்குணம் பதினொன் றாமே" என்பன. இனிக் குற்றம் வந்தவழிக் கண்டுகொள்க.

ககூ0. இருவே றுருவவும்—இ - ள். மஞ்சளும் சிவப்புங்கலந்தாலொத்த நிறத்தையுடைய கோமேதகவருக்கமும்,

ககூக - ககூஉ. ஒருமைத் தோற்றத் தைவேறு வனப்பி
னிலங்கு கதிர்விடூஉ நலங்கெழு மணிகளும்

---

* "சாதகப் புட்கண் டாமரை கழுநீர், கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு, வன்னி மாதளம் பூவிதை யென்னப், பன்னுசா தூரங்க வொளிக்குணம் பத்துஞ், செம்பஞ் சரத்தந் திலக மூலோத்திர, முயலின் சோரி சிந்துரங் குன்றி, கவிரல ரென்னக் கவர்நிற மெட்டாங், குருவிந் தத்திற் குறித்தன நிறமு, மசோகப பல்லவ மலரிசெம் பஞ்சு, கோகிலக் கண்ணீ ரிலவலர் செம்பெனத், தருசௌ கந்தி தன்னிற மாறுஞ், செங்கல் குராமலர் மஞ்சள் கோவை, குங்கும மஞ்சிற் கோவாங்கு நிறமும்,.. ... .. இவையெனக் கூறிய நிறையருட் கடவுள்" என்றார் கல்லாடத்திலும்,

இ - ள். ஒருமுதலிற்றோன்றி வேறுபட்ட ஐந்துவனப்பினையுடைய மாணிக்கம் புருடராகம் நீலம் கோமேதகம் வயிடூரியமென்னும் ஒளிவிடுமணிகளும்,

இவை ஒருவயிற் பல்பிறப்பு.

௧௯௩-௧௯௬. காற்றினு மண்ணினுங் கல்லினு நீரினுந்
தோற்றிய குற்றந் துகளறத் துணிந்தவுஞ்
சந்திர குருவே யங்கா ரகனென
வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்

இ - ள். காற்றினும் மண்ணினும் கல்லினும் நீரினுமுண்டாய்த் தோற்றிய மிக்ககுற்றங்கள் ஒருதுகளளவும் இல்லையாதலாலே தெளிந்த ஒளியையுடையனவும், சந்திரன் வெள்ளி அங்காரகன்போல வெண்ணீர்மை செந்நீர்மையையுடையவாய் உருண்டனவுமான முத்தவருக்கமும்,

காற்றேறு மணலேறு கல்லேறு நீர்நிலையென்பன மிக்ககுற்றங்கள்; பிறவும் குற்றங்கள்பலவுளவாயினுமென்க. சந்திரன் வெள்ளி அங்காரகனென்பன மிக்க குணமுடையன; பிறவும் குணங்களுளவாயினுமெனக்கொள்க. வட்டம் — நடுவட்டம்.

௧௯௭-௧௯௮. கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலுந்
திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்

இ - ள். கருப்பத்தே துளைபட்டனவும் கல்லிடுக்கிற்புக்கு முடங்குபட்டனவும் திருக்குமுறுக்குண்டெழுந்தனவுமென்னும் இக்குற்றங்களைநீங்கிய செம்மைமிக்குக் கொழுவிதாகவளர்ந்த கொடிப்பவளவருக்கமும்,

இவை மிக்ககுற்றங்கள்; பிறவும் குற்றங்களுளவாயினுமெனக்கொள்க. இனிக் குணமிக்குக் குற்றங்களைநீங்கியன, நிறமும் உருட்சியும் சிந்தூரமுமிக்க செங்காயும் முசுமுசுக்கைக் கனியும் தூதுவழுதுணம்பழமும் போல்வனவெனக்கொள்க.

௧௯௯ - ௨00. வகைதெரி மாக்க டொகைபெற் றோங்கிப்
பகைதெற லறியாப் பயங்கெழு வீதியும்

இ - ள். இவ்வொன்பதுவகைப்பட்ட மணியின் பிறப்புமுதல் சிறப்பீறாகிய வகைகளைத் தெரியவல்ல வணிகர்தொகுதலாற் சிறப்புப்பெற்றோங்கிப் பகைவரால் தெறுதற்றொழிலை எக்காலத்தும் கண்டறியாத பயன்மிக்க இரத்தினக்கடைத் தெருவும்,

பகைவர்தெறுதலைக் கனவிலுநினைந்தறியாதவெனவுமாம்.

௨0௧ - ௨0௪. சாத ரூபங் கிளிச்சிறை யாடகஞ்
சாம்பூ நதமென வோங்கிய கொள்கையிற்
பொலந்தெரி மாக்கள் கலங்களு ரொழித்தாங்
கிலங்குகொடி யெடுக்கு நலங்கிளர் வீதியும்

இ - ள். சாதரூபமும் கிளிச்சிறையும் ஆடகமும் சாம்பூநதமுமென்னும் நால்வகைச்சாதிப்பெயர்பெற்றோங்கிய கோட்பாட்டையுடைய பொற்பேதத்தைப் பகுத்தறியும் பொன்வாணிகர் எவ்விடத்து எப்பொன்னுளதென்று ஐயுறுந்தன்ப

மொழிக்கும்படி இவ்விடத்து இப்பொன்னுள்ளதெனவிளக்கக் கொடிகள் வயின் ரேறுமெடுக்கும் நன்மைபொருந்திய பொற்கடைகளும்,

ஒழித்து - ஒழிப்ப. ஆங்கு - அந்த அந்தவிடங்களிலே.

௨0௫ - ௨0எ. நூலினு மயிரினு நுழைநூற் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறுமடி செறிந்த வறுவை வீதியும்

இ - ள். நுண்ணிய பருத்திநூலினானும் எலிமயிரினானும் பட்டுநூலினானும் தத்தம் பகுதிகளால் நெய்யப்பட்டு ஒன்றை நூருகத் தெரிந்தடுக்கப்பட்ட அடுக்குப் பலநூருகிய மடிப்புடைவைகள் நெருங்கவைத்த புடைவைக்கடைகளும்,

புடைவைக்கடைகளுக்கு வாசங்கொளுத்துதலின், நறுமடியென்ருர்.

௨0அ - ௨௧௧. நிறைக்கோற் றுலாத்தர் பறைக்கட் பராரைய
ரம்பண வளவைய ரெங்கணுந் திரிதரக்
கால மன்றியுங் கருங்கறி மூடையொடு
கூலங் குவித்த கூல வீதியும்

இ - ள். நிறுக்குந்துலாக்கோலேயுடையராய் மறிக்கும் பறையையுடையராய் அளக்கும் மரக்காலேயுடையராய்த் தரகுசெய்வார் நின்றுழிநில்லாது எங்கணும் தடுமாறும்படி எக்காலமும் பெரிய மிளகுபொதியுடனே பாக்கும் நிறுக்கும்பண்டப் பொதிகளும் ஈரெண்வகைத்தாகிய கூலங்களுங்குவித்த கூலக்கடைத்தெருவும்,

பறைக்கட்பராரை - பராரைக்கட்பறையென்க. என்றது பரிய அரையையும் இரும்பால் வாய்மட்டாகக்கட்டின கண்ணேயுமுடைய பறையென்றபடி. அம்பணம் - தரகரளக்குமரக்கால். காலமன்றியுமென்றதற்கு இரவும் பகலுமெனவுமாம். கருமை - பெருமை. இதனை மூடைக்கேற்றுக ; கறிக்கேற்றினுமமையும். மூடை - பொதி. ஒடு - எண்ணெடுவாய்ப் பின்னும் சிலபண்டங்களினுழிபை உணர்த்திநின்றது. கூலம் - ஈரெண்வகைத்து ; என்னே ? " நெல்லுப் புல்லு வரகு தினை சாமை, யிறுங்கு தோரை யிராகியெண் கூலம்" எனவும், " எள்ளுக் கொள்ளுப் பயறுழுந் தவரை, கடலை துவரை மொச்சை யென்ருங், குடனிவை முதிரைக் கூலத் துணவே" எனவும் சொன்னுராகலின்.

௨௧௨ - ௨௧அ பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவு
மந்தியுஞ் சதுக்கமு மாவண வீதியு
மன்றமுங் கவலையு மறுகுந் திரிந்து
விசும்பகடு திருகிய வெங்கதிர் நுழையாப்
பசுங்கொடிப் படாகைப் பந்தர் நீழற்
காவலன் பேரூர் கண்டுமகிழ் வெய்திக்
கோவலன் பெயர்ந்தனன் கொடிமதிற் புறத்தென

இ - ள். குலம் நான்காகப்பகுத்தவகையால் தெரிந்த அந்தணர் அரசர் வாணிகர் வேளாளரெனச்சொல்லப்பட்டாரிருக்கும் நான்காய்வேறுபட்ட தெருக்களும் முச்சந்தியும் நாற்சந்தியும் கோயிலங்காடியும் பலிபெறும் மன்றிடங்களும் கவர்க்கு

நெறிகளும் தேர்வீதிகளுமாகிய இவ்விடங்களில் ஞாயிறு விசும்பினடுவாக நின்று முறுகி ஓடுதலின் அதனுடைய வெங்கதிர்கள்நுழையப்படாத புதிய கொடியும் படாகையுமென்னும் இவற்றின்பந்தர்நிழலிலேதிரிந்து காவலனது பெரிய நகரியைக்கண்டு மகிழ்ச்சியெய்துதலாலே பொருந்துழியறிதலைமறந்து போந்தானென்க.

கவலை - முடுக்குவழிகள். கதிர் மேடவீதியின் நீங்குதலின் விசும்பகடுதிருகிய வென்றார். அகடு - நடு. திருகுதல் - முறுகுதல்; "தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின்" என்றார் பிறரும். கொடி - சிறுகொடி. படாகை - பெருங்கொடி.

ஆர்ப்ப அவிழ்த்தமண்டிலம் துயிலெடுப்ப இயம்பச் சென்று ஏத்திச் சிறுமையுற்றேனென்றலும், கவுந்தியடிகள், அனையையுமல்லை; பெற்றனையன்றே ; வருந்தாதேகிப் போதீங்கென்றலும மருங்கிற்போகி அயிராதுபுக்கு மகிழ்தருவீதியும் இருபெருவீதியும் அங்காடிவீதியும் பயங்கெழுவீதியும் நலங்கிளர்வீதியும் அறுவைவீதியும் கூலவீதியும் நால்வேறுதெருவும் அந்தியும் சதுக்கமும் ஆவணவீதியும் மன்றமும் கவலையும் மறுகுமாகிய இவ்விடங்களில் பந்தர்நீழலிற்றிரிந்து காவலனூரைக் கோவலன்கண்டு மகிழ்வெய்திப் பெயர்ந்தானென வினைமுடிக்க.

இது நிலைமண்டிலம்.

பருந்து நிழலுமென ... ...அடியார்க்குநல்லானென்பான்.

ஒருந்தமிழ் ... ... ... ...நிரம்பையர்காவலனே.

காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

ஊர்காண்காதை முற்றிற்று.

## பதினைந்தாவது

# அடைக்கலக் காதை.



நிலந்தரு திருவி னிழல்வாய் நேமி
கடம்பூண் டுருட்டுங் கௌரியர் பெருஞ்சீர்க்
கோலின் செம்மையுங் குடையின் றண்மையும்
வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப்
பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட
மதுரை மூதூர் மாநகர் கண்டாங்
கறந்தரு நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பொழிலிடம் புகுந்து
தீதுதீர் மதுரையுந் தென்னவன் கொற்றமு
மாதவத் தாட்டிக்குக் கோவலன் கூறுழித்
தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து
நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை
மாமறை முதல்வன் மாடல னென்போன்
மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து
தமர்முதற் பெயர்வோன் றாழ்பொழி லாங்கண்
வகுந்துசெல் வருத்தத்து வான்றுயர் நீங்கக்
கவுந்தி யிடவயிற் புகுந்தோன் றன்னைக்
கோவலன் சென்று சேவடி வணங்க
நாவ லந்தணன் றானவின் றுரைப்போன்
வேந்துறு சிறப்பின் விழுச்சீ ரெய்திய
மாந்தளிர் மேனி மாதவி மடந்தை
பால்வாய்க் குழவி பயந்தன ளெடுத்து
வாலா மைந்நா ணீங்கிய பின்னர்
மாமுது கணிகையர் மாதவி மகட்கு
நாம நல்லுரை நாட்டுது மென்று
தாமின் புறூஉந் தகைமொழி கேட்டாங்
கிடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கட
லுடைகலப் பட்ட வெங்கோன் முன்னாட்

புண்ணிய தானம் புரிந்தோ னாகலி
னண்ணுவழி யின்றி நாள்சில நீந்த
லிந்திர னேவலி னீங்கு வாழ்வேன்
வந்தே னஞ்சன் மணிமே கலையா
லுன்பெருந் தானத் துறுதியொழி யாது
துன்ப நீங்கித் துயர்க்கட லொழிகென
விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த
வெங்குல தெய்வப் பெயரீங் கிடுகென
வணிமே கலையா ராயிரங் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய
ஞான நன்னெறி நல்வரம் பாயோன்
றானங் கொள்ளுந் தகைமையின் வருவோன்
றளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
வளைந்த யாக்கை மறையோன் றன்னைப்
பாகுகழிந் தியாங்கணும் பறைபட வரூஉம்
வேக யானை வெம்மையிற் கைக்கொள
வொய்யெனத் தெழித்தாங் குயிர்பிறப் பாளனைக்
கையகத் தொழித்ததன் கையகம் புக்குப்
பொய்பொரு முடங்குகை வெண்கோட் டடங்கி
மையிருங் குன்றின் விஞ்சைய னேய்ப்பப்
பிடர்த்தலை யிருந்து பெருஞ்சின மிறுகாக்
கடக்களி றடக்கிய கருணை மறவ
பிள்ளை நகுலம் பெரும்பிறி தாக
வெள்ளிய மனையோ ளினைந்துபின் செல்ல
வடதிசைப் பெயரு மாமறை யாளன்
கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை
வடமொழி வாசகஞ் செய்தநல் லேடு
கடனறி மாந்தர் கைந்நீ கொடுக்கெனப்
பீடிகைத் தெருவிற் பெருங்குடி வாணிகர்
மாட மறுகின மனைதொறு மறுகிக்
கருமக் கழிபலங் கொண்மி னோவெனு
மருமறை யாட்டியை யணுகக் கூஉ
யாதுநீ யுற்ற விடரீ தென்னென
மாதர்தா னுற்ற வான்றுயர் செப்பி

யிப்பொரு ளெழுதிய விதழிது வாங்கிக்
கைப்பொரு டீந்தென் கடுந்துயர் களைகென
வஞ்ச னுன்ற னருந்துயர் களைகே
னெஞ்சுறு துயர நீங்குக வென்றாங்
கோத்துறை யந்தண ருறைநாற் கிடக்கையிற்
றீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானஞ் செய்தவ டன்றுயர் நீக்கிக்
கானம் போன கணவனைக் கூட்டி
யொல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ
பத்தினி யொருத்தி படிற்றுரை யெய்த
மற்றவள் கணவற்கு வறியா னொருவ
னறியாக் கரிபொய்த் தறைந்துணும் பூதத்துக்
கறைகெழு பாசத்துக் கையகப் படலும்
பட்டோன் றவ்வை படுதுயர் கண்டு
கட்டிய பாசத்துக் கடிது சென் றெய்தி
யென்னுயிர் கொண்டீங் கிவனுயிர் தாவென
நன்னெடும் பூத நல்கா தாகி
நரக னுயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி யிழக்கும் பண்பீங் கில்லை
யொழிகநின் கருத்தென வுயிர்முன் புடைப்ப
வழிதரு முள்ளத் தவளொடும் போந்தவன்
சுற்றத் தோர்க்குந் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய கிளைஞரிற் பசிப்பிணி யறுத்துப்
பல்லாண்டு புரந்த வில்லோர் செம்ம
லிம்மைச் செய்தன யானறி நல்வினை
யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்தகோ பால நீயென வினவக்
கோவலன் கூறுமோர் குறுமகன் றன்னாற்
காவல் வேந்தன் கடிநகர் தன்னி
னாறைங் கூந்த னடுங்குதுய ரெய்தக்
கூறைகோட் பட்டுக் கோட்டுமா வூரவு
மணித்தகு புரிகுழ லாயிழை தன்னொடும்
பிணிப்பறுத் தோர்தம் பெற்றி யெய்தவு
மாமலர் வாளி வறுநிலத் தெறிந்து

காமக் கடவுள் கையற் றேங்க
வணிதிகழ் போதி யறவோன் றன்முன்
*மணிமே கலையை மாதவி யளிப்பவு
நனவு போல நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன் கடிதீங் குறுமென
வறத்துறை மாக்கட் †கல்ல திந்தப்
‡புறஞ்சிறை யிருக்கை பொருந்தா தாகலி
னரசர் பின்னோ ரகநகர் மருங்கினி
னுரையிற் கொள்வரிங் கொழிகநின் னிருப்புக்
காதலி தன்னொடு கதிர்செல் வதன்முன
மாட மதுரை மாநகர் புகுகென
மாதவத் தாட்டியு மாமறை முதல்வனுங்
கோவலன் றனக்குக் கூறுங்காலை
யறம்புரி நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பூங்க ணியக்கிக்குப்
பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோ
ளாயர் முதுமகள் மாதரி யென்போள்
காவுந்தி யையையைக் கண்டடி தொழலு
மாகாத் தோம்பி யாப்பய னளிக்குங்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை
தீதிலண் முதுமகள் செவ்விய ளளியள்
மாதரி தன்னுடன் மடந்தையை யிருத்துதற்
கேதமின் றெனவெண் ணினளாகி
மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்
றாதையைக் கேட்கிற் றனகுல வாண
ரரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவ
ருடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவு
மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்
மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கய னெடுங்க §ணஞ்சன மூட்டித்
தேமென் கூந்தற சின்மலர் பெய்து
தூமடி யுடீஇத் தொல்லோர் சிறப்பி

---

* மணிமேகலையொடு மாதவிதுறப்பவுமென்றும் பாடம்.
† அல்லதையெனவும் பாடம். ‡ புறத்துறைவாழ்க்கையெனவும் பாடம்.
§ அஞ்சனந்தீட்டியெனவும் பாடம்.

ஞயமுங் காவலு மாயிழை தனக்குத்
தாயு நீயே யாகித் தாங்கிங்
கென்னொடு போந்த விளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி
யின்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட வித்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டி ரிருந்தநா டென்னு
மத்தகு நல்லுரை யறியா யோநீ
தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினு
மிகப்பே ரின்பந் தருவது கேளாய்
காவிரிப் படப்பைப் பட்டினந் தன்னுட்
பூவிரி பிண்டிப் பொதுநீங்கு திருநிழ
லுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
விலகொளிச் சிலாதல மேலிருந் தருளித்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தம்முன்
றிருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்
றாரன் மாலையன் றமனியப் பூணினன்
பாரோர் காணாப் பலர்தொழு படிமையன்
கருவிரற் குரங்கின் கையொரு பாகத்துப்
பெருவிறல் வானவன் வந்துநின் றோனைச்
சாவக ரெல்லாஞ் சாரணர்த் தொழுதீங்
கியாதிவன் வரவென விறையோன் கூறு
மெட்டி சாயல னிருந்தோன் றனது
பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையிலோர்
மாதவ முதல்வனை மனைப்பெருங் கிழத்தி
யேத நீங்க வெதிர்கொ ளமையத்
தூர்ச்சிறு குரங்கொன் றொதுங்கியுள் புக்குப்
பாற்படு மாதவன் பாதம் பொருந்தி
யுண்டொழி மிச்சிலு முகுத்த நீருந்
தண்டா வேட்கையிற் றான்சிறி தருந்தி

யெதிர்முக நோக்கிய வின்பச் செவ்வியை
யதிராக் கொள்கை யறிவனு நயந்தனன
மக்களி னோம்பு மனைக்கிழத் தியென
மிக்கோன் கூறிய மெய்ம்மொழி யோம்பிக்
காதற் குரங்கு கடைநா ளெய்தவுந்
தானஞ் செய்வுழி யதற்கொரு கூறு
தீதறு கென்றே செய்தன ளாதலின்
மத்திம நன்னாட்டு வாரணந் தன்னு
ளுத்தர கௌத்தற் கொருமக னாகி
யுருவினுந் திருவினு முணர்வினுந் தோன்றிப்
பெருவிறற் றானம் பலவுஞ் செய்தாங்
கெண்ணா லாண்டி னிறந்த பிற்பாடு
விண்ணோர் வடிவம் பெற்றன னாதலிற்
பெற்ற செல்வப் பெரும்பய னெல்லாந்
தற்காத் தளித்தோ டானச் சிறப்பெனப்
பண்டைப் பிறப்பிற் குரங்கின் சிறுகை
கொண்டொரு பாகத்துக் கொள்கையிற் புணர்ந்த
சாயலன் மனைவி தானந் தன்னா
லாயின னிவ்வடி வறிமி னோவெனச்
சாவகர்க் கெல்லாஞ் சாற்றினன் காட்டத்
தேவ குமரன் றோன்றின னென்றலுஞ்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
யாரணங் காக வறந்தலைப் பட்டோ
ரன்றப் பதியு ளருந்தவ மாக்களுந்
தன்றிறல் வாழ்க்கைச் சாவக மாக்களு
மிட்ட தானத் தெட்டியு மனைவியு
முட்டா வின்பத்து முடிவுல கெய்தினர்
கேட்டனை யாயினித் தோட்டார் குழலியொடு
நீட்டித் திராது நீபோ கென்றே
கவுந்தி கூற வுவந்தன ளேத்தி
வளரிள வனமுலை வாங்கமை பணைத்தோண்
முளையிள வெண்பன் முதுக்குறை நங்கையொடு
சென்ற ஞாயிற்றுச் செல்சுட ரமையத்துக்
கன்றுதே ராவின் கனைகுர லியம்ப
மறித்தோ ளவியத் துறிக்கா வாளரொடு
செறிவளை யாய்ச்சியர் சிலர்புறஞ் சூழ

மிளையுங் கிடங்கும் வளைவிற் பொறியுங்
கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்
தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங்
கவையுங் கழுவும் புதையும் புழையு
மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையு
மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்
கோலுங் குந்தமும் வேலும் பிறவு
ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில் கழிந்துதன் மனைபுக் கனளாற்
கோவலர் மடந்தை கொள்கையிற் புணர்ந்தென.

க-அ. நிலந்தரு திருவி னிழல்வாய் நேமி
கடம்பூண் டுருட்டுங் கௌரியர் பெருஞ்சீர்க்
கோலின் செம்மையுங் குடையின் றண்மையும்
வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப்
பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட
மதுரை மூதூர் மாநகர் கண்டாங்
கறந்தரு நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பொழிலிடம் புகுந்து

-ள். நிலத்திற்குப் பலதிருவினையுந்தரும் அருளாகிய நிழலிடத்தேநின்று நேமியை முறைமையான் மேற்கொண்டுசெலுத்தும் பாண்டியருடைய மிக்கபுகழ் பொருந்திய கோலினதுசெம்மையும் குடையினதுதண்மையும் வேலினதுவெம்மை யும் விளங்குதற்கிடமாகிய கோட்பாட்டையுடைய அவ்விடத்தினின்றும் நீங்குத லறியாத முறைமைமேம்பட்ட மதுரைமூதூராகிய மாநகரைக்கண்டு அந்நகரின் அறத்தைப் பிறர்க்கருளும் நெஞ்சினையுடைய அறவோர்பயின்ற புறமதிற்கண் உள்ளதாகிய மூதூர்ப்பொழிலிடத்தே தபோதனரிருக்கும் பள்ளிக்கண்ணே புகுந் தென்க.

இனி, நிலந்தருதிரு - விளைவு; அதனிழலிடத்தே நின்றெனினுமமையும். நேமி - ஆணை = சக்கரம். கௌரியர் - பாண்டியர். கொற்றம் - வெம்மை. தருதல் - கொடை.

கூ-௧௦. தீதுதீர் மதுரையுந் தென்னவன் கொற்றமு
மாதவத் தாட்டிக்குக் கோவலன் கூறுழி

இ - ள். தீதுகள்நீங்கிய மதுரையின்சிறப்பையும் தென்னவன்கொற்றத்தை யும் கவுந்தியடிகளுக்குக் கோவலன்கூறுகின்றவளவிலேயென்க.

நீது - பசியும் பிணியும் பகையும். நீர்தல் - நீங்குதல். ‘கோலின்செம்மை’ என்பதனால் பசிநீங்குதலும், [*“கோணிலை திரிந்து நாழி... ... ...கோல் கோடி னென்றான்” என்பதனாற்கொள்க.] ‘குடையின் றண்மை’ என்பதனாற் பிணி நீங்குதலும், [†கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே” என்பதனாற்கொள்க.] ‘வேலின் கொற்றம்’ என்பதனாற் பகைநீங்குதலுங்கொள்க.

௧௧-௧௩. தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து
நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை
மாமறை முதல்வன் மாடல னென்போன்

இ - ள். தாழ்ந்தநீரைவேலியாகவுடைய ‡தலைச்செங்காடென்னுமூரிடத்து நான்குவேதத்தினையும் ஓதி முற்றுப்பெற்ற நலத்தைப்புரிந்த கோட்பாட்டையுடைய மறையவர்க்குமுதல்வனாகிய மாடலனென்று பெயர்கூறப்படுவோனென்க.
நீர்வேலி - கிடங்குமாம்.

௧௪-௧௯. மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை கொளகையிற் படிந்து
தமர்முதற் பெயர்வோன் றாழ்பொழி லாங்கண்
வருந்துசெல் வருத்தத்து வான்றுயர் நீங்கக்
கவுந்தி யிடவயிற் புகுந்தோன் றன்னைக்
கோவலன் சென்று சேவடி வணங்க

இ - ள். அந்த மாடலனென்போன், அகத்தியனுடைய பொதியின்மலையை வலங்கொண்டு குமரியாற்றில் தீர்த்தமாடுமுறைமையினாடித் தனது குடும்பமிருக்கின்றவிடத்திற்கு மீண்டுவருகின்றவன் வழிவந்தவருத்தத்தானுண்டாய துயரநீங்குதற்குக் கவுந்தியடிகளிருந்த பள்ளியிடத்தேசென்று புகுந்தவனைக் கோவலன் சென்று வணங்கவென்க.

தமர்முதல் - தமரிடம். வருந்து - வழி; §“வரைசேர் வருந்திற் கானத்துப் படுநே” என்றார் மலைபடுகடாத்திலும். இடவயின் - இடத்தில். வான்றுயர்நீங்கத் தாழ்பொழிலாங்கட் கவுந்தியிடவயிற புகுந்தோனென்க.

---

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௨௨௩: கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி, நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப், பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி, யானையிவ் வுலகு கேடா மரசுகோல கோடி னென்றான். “கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியுங், கோணிலை திரிந்திடின் மாரி வறங்கூரு, மாரி வறங்கூரின் மன்னுயி ரில்லை, மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன், றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்” என்றார் மணிமேகலையிலும்; எ - வது நுயிலெழுப்பியகாதை.

† புறநானூறு, ௩௫: இச்செய்யுள்முழுவதையும், ௧௩௧-ம் பக்கத்திற்காண்க.

‡ தலைச்செங்காடென்பது காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்மேற்கிலே நான்குநாழிகைவழித் தூரத்திலுள்ளது.

§ மலைபடுகடாம், ௨௪௨.

௨௦. நாவ லந்தணன் றனைவின் றனைப்போன்

இ - ள். நாவாற் சொல்வன்மையையுடைய அந்தணன் நீர் இங்ஙனம்வருதற்குக் காரணம் யாதென்று இவனைவினவித் தானுரைக்கின்றவனென்க.

௨௧-௨௭. வேந்துறு சிறப்பின் விழுச்சீ ரெய்திய
மாந்தளிர் மேனி மாதவி மடந்தை
பால்வாய்க் குழவி பயந்தன ளெடுத்து
வாலா மைந்நா ணீங்கிய பின்னர்
மாமுது கணிகையர் மாதவி மகட்கு
நாம நல்லுரை நாட்டுது மென்று
தாமின் புறூஉந் தகைமொழி கேட்டாங்கு

இ - ள். கரிகாலன்கொடுத்த மிக்க தலைவரிசையாற் சிறந்தபுகழினைப்பெற்ற மாவின்றளிர்போலும் மேனியையுடைய மாதவியாகியமடந்தை மேற்பெறக்கடவ நல்ல ப்குதியையுடைய குழவியைப் பயந்தெடுத்து வாலாமையாகிய நாட்கணீங்கியபின் மிகவும் பிராயமுதிர்ந்த கணிகையர் மாதவிமகட்கு நாமகரணம்பண்ணுவோமென்று தாம் மகிழ்வுறுதற்குக்காரணமாகிய மங்கலமொழியைக் கேட்டு அப்பொழுது,

வாலாமை - ஆசௌசம் முதுகணிகையர் - தாயத்தாராயபெண்டிர்; அவர் சித்திராபதிமுதலாயினர். முன்னர்க் குழவியென்றதன் பொதுமைநீங்க மகட்கென்றார். நாட்டுதும் - பன்மைத்தன்மை. நாட்டுதல் - நிறுத்தல்.

௨அ-௩௭. இடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கட
லுடைகலப் பட்ட வெங்கோன் முன்னாட்
புண்ணிய தானம் புரிந்தோ னாகலி
னண்ணுவழி யின்றி நாள்சில நீந்த
விந்திர னேவலி னீங்கு வாழ்வேன்
வந்தே னஞ்சன் மணிமே கலையா
னுன்பெருந் தானத் துறுதியொழி யாது
துன்ப நீங்கித் துயர்க்கட லொழிகென
விருளையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த
வெங்குல தெய்வப் பெயரீங் கிடுகென

இ - ள் முன்னாளிலே எறியுந்திரைகளையுடைய கடலிடத்து இடையிருள் யாமத்தில் தன்மரக்கலம் உடையப்பட்ட எங்கோன் முற்பவத்திற் புண்ணியத்தையும் தருமதானத்தையும் செய்தோனாதலின் தன்னையணுகும் இடையூறு ஓரிடத்துமின்றி அக்கடலிடையே சிலநாணீந்துழி, ஓர்தெய்வந்தோன்றி, இத்தீவினுள்ளாரை அரக்கர் வாதைபண்ணாமல் இந்திரனேவலாலே பாதுகாத்துவாழ்கின்றயான் நின்றுயர் கண்டு அதனையொழித்தற்குவந்தேன்; இனி அஞ்சாதொழிக; என்பெயர் மணிமேகலைகாண்; என்றாலன்றியும் நீ முன்பண்ணியதானமிகுதியான்வரும் புண்ணிய

மும் நின்னையொழியாது; ஆகலான், நீ இத்துன்பத்தினின்றுநீங்கி இக்கடலி னின்றும் ஏறுவாயாகவெனச்சொல்லித் தன்விஞ்சையால் ஓர்துடரிற்பெயர்த்து இடும்பையைத்தீர்த்த எங்குலதெய்வத்தினுடையபெயரை ஈங்கு நீரிடுமினென்று *நீ சொல்லவென்க.

கரைகாணக்கடலென்பார் பெருங்கடலென்றார்; எங்கோன் - எம்மரபில் முற்பட்டான். முன்றுளென்பதனை உடைகலப்பட்டவென்பதனேடும் புண்ணிய தானமென்பதனேடு மொட்டுக. நண்ணுவழியின்றியென்பதற்குக் கரைசேருமிட மின்றியென்றுமுரைப்பர். புண்ணியதானம் - உம்மைத்தொகை. தானத்துறுதி - தானப்பயன்; ஆவது புண்ணியம். விஞ்சையிற்பெயர்த்தென்பதற்கு இக்கரை யிலே மீளவுந்தந்தெனினுமமையும். எங்குலதெய்வம் - எங்குலத்தையுண்டாக்கிய தெய்வம்; இன்னும் விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்தவென்பதற்குத் தன் விஞ்சையினுலே போயபொருளும் கல்வியும் வஞ்சமறத்தந்து இடும்பையைத் தீர்த்த எங்குலதெய்வமெனினுமமையும்; †"விஞ்சைகள் வல்லேன் விளிந்தநின் றோழரொ, டெஞ்சிய வான்பொரு ளெலலா மிமைப்பினுள், வஞ்சமொன் றின்றி மறித்தே தருகுவ, னெஞ்சிற் குழைந்து நினையன்மி னென்றான்" என்றார்பிறரும்.

ஈங்கு - இக்கடலிடத்தெனவும், இந்நகரிடத்தெனவும், இப்படி விபத்தினின்று மெடுப்பதற்கெனவுமாம். வந்தேன்; அஞ்சல்; உறுதியொழியாது; நீங்கி ஒழி கெனப் பெயர்த்துத் தீர்த்த எங்குலதெய்வமென்க.

௩௮-௪௧. அணிமே கலையா ராயிரங் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய

இ - ள். அணிந்தமேகலையையுடைய அநேகங்கணிகையர்கூடி மணிமேகலை யென்று பெயர்கூறி அரசனையும் நகரையும்வாழ்த்திய அற்றைநாளிலே நிறைந்த அழகையுடைய மடந்தையாகிய மாதவியுடனே செம்பொன்னுகியமாரியைச் செங் கையாலே நீ பொழியாநிற்கவென்க.

௪௨-௪௭. ஞான நன்னெறி நல்வரம் பாயோன்
றானங் கொள்ளுந் தகைமையின் வருவோன்
றளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
வளைந்த யாக்கை மறையோன் றன்னைப்
பாகுகழிந் தியாங்கணும் பறைபட வரூஉம்
வேக யானை வெம்மையிற் கைக்கொள

* இதனை, "திரையிரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக், கோவ லன் கூறியிக் கொடியிடை தன்னையென், னுமஞ் செய்த நன்னு ணள்ளிருட், காமன் கையிற் கடுநவை யறக்கு, மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே, நனவே போலக் கனவகத் துரைத்தேன்" என மணிமேகலாதெய்வங்கூறியதாக மணிமேகலையிற் கூறுமாற்றானுமுணர்க. ஏழாவது துயிலெழுப்பியகாதை.

† சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், உ௮.

இ - ள். அங்ஙனம்பொழியாநிற்க, வீட்டுலகஞ்சேர்தற்கு நல்லநெறியாகிய ஞானத்திற்குத் தானெல்லையாகிய மறையோனொருவன் தன்மூப்பான யாக்கை வளைந்து நடைதளர்தலால் தான்பிடித்த தண்டினையே காலாகவூன்றிக் கூனின யாக்கையையுடையனாய்த் தானங்கொள்ளுதற்குத் தனனைமதித்துவருகின்றவனைப் பாகர்செயலைக்கழிந்து எங்கணும் பறைகொட்டவருகின்ற மதவேகத்தையுடைய யானை சினத்தாற் கைக்கொண்டதாகவெனக.

சஅ-ருஉ. ஒய்யெனத் தெழித்தாங் குயாபிறப் பாளனைக்
கையகத் தொழித்ததன் கையகம் புக்குப்
பொய்பொரு முடங்குகை வெண்கோட் டடங்கி
மையிருங் குன்றின் விஞ்சையன் ஏய்ப்பப்
பிடர்த்தலை யிருந்து பெருஞ்சினம் பிறழாக்
கடக்களி றடக்கிய கருணை மறவ

இ - ள். அங்ஙனம் மறையோனைக்கைக்கொண்டவளவிலே யானையை அவனை நெருங்காதொழியென உரப்பி அக்கணத்திலே சென்றுசேர்ந்து தன்கையாலே மறையோனைநீக்கி அதன்கையில் தான்புக்கவளவிலே யானை கையாலவளைப்பப் புணர்பொருந்திய வளைந்த கையினின்றுநீங்கி வெளிய கோட்டிலேயடங்கி அது பற்றுக்கோடாகவேறிக் கரிய பெரிய குன்றின்மேலிருந்த விஞ்சையனைப்போலே அதன்பிடரினிடத்திருந்து மிக்க சினநீங்காதகளிற்றை மதத்தையடக்கிய கிருபா வீரனே!

ஒய்யென்பது யானையைப் பாகர் வையும் ஆரியமொழியெனினுமமையும்; *"அணணலங் களிற்றை வையா" என்றார் பிறரும். இனி விரையத் தெழித்த தெனினுமமையும். தெழித்தல் பிரித்தலுமாம்; குடநாட்டார்வழக்கு. பொய் - புரை. பொரு - பொருந்தின, விகாரம். முடங்குகையையுடையகோடெனினுமமையும். மை - மஞ்சுமாம்; முகபடாத்துக்குவமையாகருக. பிறழாக் - நீங்குதல. கருணை - அருள். மறம் - வீரம் †"மொய்கொளப் பிறழ்ந்து முத்தார மருப்பிடைக் குளித்து" என்றார் பிறரும். கைக்கொளத் தெழித்து ஒழித்துப் புக்கு அடங்கி இருந்து அடக்கிய மறவவெனக.

ருச-எரு. பிள்ளை நகுலம் பெரும்பிறி தாகக்
வெள்ளிய மனையோ ளினைந்துபின் செல்ல
வடதிசைப் பெயரு மாமறை யாளன்

---

* சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், கஉஅ —பெண்ணுயி ரவல நோக்கிப் பெருந்தகை வாழ்விற சாத, லெண்ணினெ னெண்ணி னெய்தா வினமலா மாலை சுற்று, வண்ணப்பொற கடக மேற்று வாரகச்சிற றூனை வீக்கா, வண்ணலங் களிற்றை வையா வார்த்துமே லோடி னானே.

† சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், கஙரு.—கையகப் படுத்த லோடுங் கார்மழை மின்னி னெய்தா, மொய்கொளப் பிறழ்ந்து முத்தார் மருப்பிடைக் குளித்துக் காற்கீ, ழையெனு வடங்கி வலலா னுடைய மணிவட் டேய்ப்பச், செய் கழற் குரிசி லாங்கே கரந்துசே ணகற்றி னானே.

கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை
வடமொழி வாசகஞ் செய்தநல் லேடு
கடனறி மாந்தர் கைந்நீ கொடுக்கெனப்
பீடிகைத் தெருவிற் பெருங்குடி வாணிகர்
மாட மறுகின் மனைதொறு மறுகிக்
கருமக் கழிபலங் கொண்மி னோவெனு
மருமறை யாட்டியை யணுகக் கூஉ
யாதுநீ யுற்ற விடரீ தென்னென
மாதர்தா னுற்ற வான்றுயர் செப்பி
யிப்பொரு ளெழுதிய விதழிது வாங்கிக்
கைப்பொரு டந்தென் கடுந்துயர் களைகென
வஞ்ச லுன்ற னருந்துயர் களைகே
னெஞ்சுறு துயர நீங்குக வென்றாங்
கோத்துடை யந்தண ருரைநூற் கிடக்கையிற்
றீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானஞ் செய்தவ டன்றுயர் நீக்கிக்
கானம் போன கணவனைக் கூட்டி
யொல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ

இ - ள். தான்வளர்த்தகீரி தன்பிள்ளையைக்காத்திருந்ததாக, ஒரு பாம்பணுக அதனைக் கௌவித்துணித்த குருதிவாயோடு தன்வரவுபார்த்து எதிர்கொண்டதனைத் தன்பிள்ளையைக்கடித்ததெனக்கருதித் தன்கையின்மணையாற்புடைக்க அது மரித்தலாலே வடதிசையைநோக்கிக் கங்கையாடப்போகின்ற கொழுநனை மனைவிபின்செல்லப் பொருதிகழ்ந்து நின்னொழுக்கத்தின் உண்டு மனையறத்தின்கண் வாழும் வாழ்க்கை இனிக் கடவதன்று; ஆதலான், வடமொழிவாசகமெழுதிய இவ்வேட்டினை உணரக்கடவ பொருளையறியும் மாந்தர்கையகத்தே நீகொடுக்கவெனச்சொல்லி அவன்போக, பீடிகைத்தெருவினும் மாடமறுகினும் பிறர்மனைகளினும் போகமீளத் திரிந்து கருமக்கழிபலங்கொண்மினோவெனக் கூவும் அருமறையாட்டியைக்கூவி நீ இங்ஙனமாதற்கு நீயுற்றவிடர்யாது? இக்கூறியதியாதென்று கேட்ப, அம்மாதர் தான் கொலைசெய்தலாற் கொழுநன்பிரிய அவனைக்காணாது மிக்கதுன்பமுற்றதனைக்கூறி இத்திறமாகிய பொருளையெழுதிய ஏட்டினை வாங்கிக்கொண்டு கைப்பொருளைத் தந்து எனது கடுந்துயரைக் களைகவென்றுசொல்ல, அஞ்சாதொழி; நின்துயரை யானேகளைகேன்; நின்னெஞ்சின்மிக்கதுயரத்தை இனி நீங்குவாயாகவெனச்சொல்லி அப்பொழுதே தருமாசனத்தோருரைத்த நூல்வழியே அப் பார்ப்பனிக்குளதாகிய கொலைப்பாவநீங்குதற்குத் தானத்தையுஞ்செய்து அவள்துன்பநீக்கிக் காட்டுநெறிக்கட்போன கணவனையுங்கூட்டி அவர்க்கு மேலுள்ளகாலத்திற்குத் தளராத பலபடைப்பாகிய செல்வத்தோடே மிக்க கைப்பொருளையுங்கொடுத்து வேள்வியையுஞ்செய்வித்த தொலையாத செல்வனே!

வடதிசைப்பெயர்தல் - கங்கையாடப்போதல். கை - ஒழுக்கம்; கையாறுண்டொழுகும் இல்வாழ்க்கையெனவுமாம். வடமொழி - ஆரியம். வாசகம் - கவி. ஆவது "அபரீக்ஷ்ய நகர்த்தவ்யம் கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம் - பஸ்சாத்பவதி ஸந்தாபம் *ப்ராஹ்மணீ நகுலம்யதா" [அபரீக்ஷ்ய நகர்த்தவ்யங் கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம், பச்சாத்பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம்யதா] என்பது. ஏடு - இக்கவியையெழுதியஏடு. மறுகி - சுழன்று. கருமக்கழிபலம் - பாவத்தைக்கழிக்கும்புண்ணியம். கருமம் - அவள்கொன்றகொலை. அதனைக் கழிக்கை யாவது போனகணவனைக்கூடுதல் பலங்கொள்கை - அவன்வரும்படி தானம் பண்ணவேண்டும்பொருடருதல். நீத்திறம் - கொலைத்திறம் ஒல்காச்செல்வமுடையோனுதலாலே உறுபொருள்கொடுத்தென்றுமாம்.

௭௬-௯0. பத்தினி யொருத்தி படிற்றுரை யெய்த
மற்றவள் கணவற்கு வறியா னொருவன்
றறியாக் கரிபொய்த் தறைந்துணும் பூதத்துக்
கறைகெழு பாசத்துக் கையகப் படலும்
பட்டோ னவ்வை படுதுயர் கண்டு
கட்டிய பாசத்துக் கடிதுசென் றெய்தி
யென்னுயிர் கொண்டவ னுயிர்தா வென்ன
நன்னெடும் பூத நல்கா தாகி
நரக னுயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி யிழக்கும் பண்பீங் கில்லை
யொழிகநின் கருத்தென வுயிர்முன் புடைப்ப
வழிதரு முள்ளத் தவளொடும் போந்தவன்
சுற்றத் தோர்க்குந் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய கிளைஞரிற் பசிப்பிணி யறுத்துப்
பல்லாண்டு புரந்த வில்லோர் செம்மல்

இ-ள். ஒருபத்தினி பொய்ப்பழியெய்துதற்கு அறிவிலாதானொருவன் அவள் கணவனுக்குப் பொய்ச்சான்றேறுதலாலே †தவமறைந்தொழுகுவோர்முதலாகிய அறுவகையோரையும் புடைத்துண்ணும் பூதத்தினுடைய கரியபாசத்தினிடத்தே அவனகப்பட அங்ஙனம் அகப்பட்டோனுடைய தாய்படாநின்ற துயரத்தைக் கண்டு அவனைப்பூண்ட பாசத்தினுள்ளே விரையத்தானபுகுந்து, பூதநாதனே, நினக்கு உணவாக என்னுயிரைக்கைக்கொண்டு இவனுயிரைத்தருவாயாகவென்றிரப்பவும், பூதம் நல்காதாய் இக்கீழ்மகனுடைய உயிர்க்கு நினது நல்லுயிரைக்கொண்டு மேலானகதியை இழக்குமுறைமை என்பாலில்லை; ஆதலால் நீ இக்கருத்தை யொழிவாயாக; நின்முன்பே இவனைப்புடைத்துண்பேனெனப் புடைத்து விழுங்

* "ப்ராஹ்மணீ நகுலார்த்தவ" என்றும் பாடம்.

† தவமறைந்தொழுகுவோர்முதலாகிய அறுவகையோரையும் பூதம்புடைத்துண்ணுமென்பதை, இந்திரவிழவூரெடுத்தகாதை [௧௨௮ - ௧௩௪] யானுணர்க.

கிற்றாக; அதனால் நெஞ்சழிந்த இடும்பையோளொடு மீண்டுபோந்து அவனுடைய சுற்றத்தினுள்ளார்க்கும் தொடர்புபட்ட கிளைகட்கும் நெஞ்சாற்பற்றிய நின்கிளைஞரைப்போல அன்புபட்டுப் பசியாகியபிணியைத்தீர்த்துப் பல்யாண்டு பாதுகாத்த இல்லத்தோர் தலைவனே!

படிறு - பொய். அறியாக்கரி - பொய்க்கரி. தவ்வை - தாய். நரகன் - நரகிற்கேதுவானவன். தன்னைவணங்கியகோவலனை, மாடலன், கடகளிறடக்கிய கருணை மறவ! நல்வழிப்படுத்த செல்லாச்செல்வ! பல்யாண்டுபுரந்த இல்லோர்செம்மலெனப்புகழ்ந்து மேலுஞ்சொல்லுவான் :—

௯௧-௯௪. இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்தகோ பால நீயென வினவ

இ - ள். மறவ! செல்வ! செம்மல்! கோபால! யானறிய இப்பிறப்பிற்செய்தவெல்லாம் நல்வினையாகவும் இம்மாணிக்கக்கொழுந்துடன் நீபோந்து ஒருதனியுழந்தது உம்மைத்தீவினைப்பயனோதானென்று வினவினவளவிலேயென்க.

உம்மை - முற்பிறப்பு. ஒருதனியுழத்தல் - உசாவில்லாத்துன்பம். திருத்தகு மாமணி - முழுமாணிக்கம். கொழுந்தென்றார்; அவளிளமைபற்றி. விருத்தகோபால - ஞானவிருத்தனே.

௯௫-௧0௯. கோவலன் கூறுமோர் குறுமகன் றன்னாற்
காவல வேந்தன் கடிநகா தன்னி
னாறைங் கூந்த லணங்குதுய ரெய்தக்
கூறைகோட் பட்டுக் கோட்டுமா வூரவு
மணித்தகு புரிகுழ லாயிழை தன்னொடும்
பிணிப்பறுத் தோர்தம் பெறுதி யெய்தவு
மாமலர் வாளி வறுநிலத் தெறிந்து
காமக் கடவுள் கையற் றேங்க
வணிதிகழ் போதி யறவோன் றன்முன்
மணிமே கலையை மாதவி யளிப்பவு
நனவு போல நள்ளிருள் யாமத்துக
கனவு கண்டேன் கடிதீங் குறுமென

இ - ள். மாடலன் உம்மைப்பயனோவென்றவினாவிற்குக் கோவலன்கூறுவான்:—ஓர்கீழ்மகனால் இக்காவல்வேந்தனுடைய இந்நகர்தன்னிலே மணம்பொருந்திய ஐவகைக்கூந்தலையுடைய இவள் நடுங்கித்துயரமுற யான் உடுத்தகூறையைப் பிறர்கொள்ளப்பட்டுக் கோட்டினையுடைய கடாவின்மேலேயேறவும் அணிபெற வகுக்கத்தக்க புரிந்த குழலையுடைய ஆயிழையுடனே பற்றற்றோர்பெறும்பேற்றை யான்பெறவும் காமக்கடவுள் மலர்வாளியை வெறுநிலத்தேயெறிந்து செயலற்றேங்கும்படி போதியறவோனிடத்தே மணிமேகலையை மாதவியளிப்பவும் மெய்

போலச் செறிந்த இருளையுடைய வைகறையாமத்தே கனவுகண்டேனாதலான் அது நன்றன்று; இப்பொழுதே வந்துறுமென்று சொல்லவென்க.

குறுமை - நண்டுப்பண்பன்று; சிறுமையென்னும்பொருட்டாய்க் குலத்திற்கடியாய் அதன் உயர்பின்மையுணர்த்திநின்றது. காவலவேந்தன்கடிநகரென்பதற்கு இகரச்சுட்டுவருவித்துரைக்க. கோட்படுதல் - பிறராற் கொள்ளப்படுதல். கோட்டுமா - எருமையேற்றை; என்னை? "சொல்லத் தகுமுகட் டொட்டகம் வெட்டுந் துணைமருப்பா, னில்லத் தெருமை கழுதைக ளென்றிவை யேறிநின்றே, மெல்லத் தரையி லிழிவதன் முன்னம் விழித்திடுமேற், கொல்லத் தலைவரு மாற்றருஞ் சீற்றத் துக் கூற்றுவனே" என்றாராகலின். இனிப் பன்றியெனவுமாம்; *"களிறுமேற் கொள்ளவுங் காழக நீப்பவுங், . . . . கனவி னரியன காணா" என்றார் புறத்தினுமாதலால். களிறென்றது ஆண்டுப்பன்றியை. என்னை? "மிக்க வெயிற்றின கொம்பின பன்றி விறற்குரங்கு, தொக்கன தம்மைக் கனவினிற் காணிற் சுடர்மகுடச், சக்கர வர்த்திக ளாற்பய முண்டெனுந் தம்மயிர்க, ளுக்கன வாதல்செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே" என்றாராகலின். கோட்டுமாவென்பதனை யானையெனின்,—"ஓதும் பசுவு மிடபமும் யானையு மோங்கல்களுஞ், சீரான்ற கோயிலு மேறிடக் காணினுந் திமலத்தை, மீதொன்ற மேனியிற் பூசினுங் கூசிடு மெல்லியலார், சூதொன்று கொங்கை புணரினும் வாழ்வென்று சொல்லினரே" என்பதனால் யானையன்மையறிக. பிணிப்பு - பற்று. ஆவது அன்பாகிய ஒரு தளை. அதனையறுத்தோர் அருளுடையோர்; அவர்பெற்றியாவது சுவர்க்கமெனக்கொள்க; †"அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்றாராகலின். வாளி - வாளியை. வறுநிலம் - வெறுநிலம். நிலங்கண்டும் அல்லாமைகூறிற்று. கையற்று - செயலற்று. போதியறவோன் - புத்தன். நள் - நளியென்னுமுரிச்சொல் ஈறு இரிபு; செறிவின்கண்வந்தது, எனவே வைகறையாமமென்பதாயிற்று. கடிது - பொல்லாததொன்று. ஈங்குறும் - இவ்விடத்தேவரும். இனி இக்கனாக் கடையாமத்துக்கண்டதாதலால், இவ்விடத்தே கடிதிற்பலிக்குமென்றாரெனினுமமையும், ‡"ஆயிடை, வெஞ்சுடர் தோன்றி விடி

---

* புறநானூறு, ௪௧.—காலனுங் காலம் பார்க்கும் பாராது, வேலீண்டு தானை விழுமியோர் தொலைய, வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே, திசையிரு நான்கு முற்கை யுற்கவும் பெருமரத், திலையி னெடுங்கோடு வற்றல் பற்றவும், வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவு, மஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவு, மெயிறு நிலத்து வீழவு மெண்ணெ யாடவுங், களிறுமேற் கொள்ளவுங் காழக நீப்பவும், வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவுங், கனவி னரியன காணா நனவிற், செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி, மையல் கொண்ட வேமதி லிருக்கையர், புதல்வர் பூங்கண் முத்தி மனையோட், கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு, பெருங்கலக் குற்றன்றாற் றானே காற்றோ, டெரிநிகழ்ந் தன்ன செலவிற், செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே.

† திருக்குறள், அருளுடைமை, ௭.

‡ சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௧௧௦.—பஞ்சி யடிப்பவ ளத்துவர் வாயவ, ரஞ்சு மிடைக்கன மூன்றவை தோன்றலி, னஞ்சி நடுங்கின ளாயிழை யாயிடை, வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே.

தயன்றே" என்றார் சிந்தாமணியினும். "படைத்தமுற் சாமமோ ராண்டிற் ...கும் பகிரண்டே, கிடைத்தபிற் சாம மிகுதிங்க ளெட்டிற் கிடைக்குமென்னு, ...டப்பட்ட சாமமொர் மூன்றினிற் றிங்களோர் மூன்றென்பவாற், கடைப்பட்ட ...மமு நாள்பத்து ளேபலங் கைபெறுமே." இவை சுறுநூலாதலாற்கொள்க. ...ன்னும், கடிதிங்கு - மிக்கதீங்கு; அச்சத்தையுடைய தீங்கெனவுமாம்.

௧௰௭-௧௧௪. அறத்துறை மாக்கட் கலல திந்தப்
புறஞ்சிறை யிருக்கை பொருந்தா தாகலி
னரசர் பின்னோ ரகநகர் மருங்கினின்
னுரையிற கொள்வரிங் கொழிகநின் னிருப்புக்
காதலி தன்னொடு கதிரசெல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகுகென
மாதவத் தாட்டியு மாமறை முதல்வனுங்
கோவலன் றனக்குக் கூறுங் காலை

இ - ள். துறவறத்தானுறையுமாக்கட்கல்லது இந்தப் புறஞ்சிறையிலிருக்கு மிருப்புப் பொருந்தாதாகலின், இவ்வகநகரிடத்துவாணிகர் மாசாத்துவான்மகனென் னும்புகழால் எதிரேற்றுக்கொள்ளுவார்; ஆகலின், இவ்விடத்து நின்னிருப்பையொ ழிக; இனிக் கதிர்செல்வதன்முன்னே நின்காதலியுடனே மதுரைமாநகர்புகுகவெ ன்று கவுந்தியடிகளும் மாடலனும் கோவலனுக்குக் கூறுகின்றகாலத்தேயென்க.

அறத்துறை - அறத்தின்றுறையெனவும், அறத்தின்கணுறையெனவுமாம். புறஞ்சிறை - புறம்பின்கட்பள்ளி. அகநகர்மருங்கினரசர்பின்னோரெனமாறுக. நின் னுரையென்றார், மாசாத்துவான்மகனென்பதனை. மதுரையாகிய மாநகரென்க.

௧௧௫-௧௧௯. அறம்புரி நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பூங்க ணியக்கிக்குப்
பான்மடை கொடுத்துப் பண்பிற பெயர்வோ
ளாயர் முதுமகண் மாதரி யென்போள்
காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்

இ - ள். அங்ஙனங்கூறுகின்றுழி, ஆயர்குலத்துப்பிறந்து மாதரியென்றுபெயர் கூறப்படுவோள் ஓர்முதுமகள், பூப்போலுங்கண்ணையுடைய இயக்கிக்குப் பான் மடையேற்றி வழிபாட்டோடு வருகின்றவள் அறத்தைப்புரிந்தநெஞ்சினையுடைய அறவோர்பலராயிருக்கின்ற புறமதிற்பள்ளிக்கணிருந்த கவுந்தியடிகளைக்கண்டுவந்து அடிதொழுதாளாகவென்க.

இயக்கி - ஆரியாங்கனை. பான்மடை - பாற்சோறு.

௧௨௦-௧௨௪. ஆகாத் தோம்பி யாப்பய னளிக்குங்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை
தீதிலண் முதுமகள் செவ்விய ளளியண்
மாதரி தன்னுடன் மடந்தையை யிருத்துதற்
கேத மின்றென வெண்ணின ளாகி

இ - ள். ஆவைக்காத்தோம்பி அவ்வாவின்பயனை யாவர்க்குமளிக்கும் இடையருடைய இல்வாழ்க்கையில் ஒருகொடுமைப்பாடுமில்லை; அதன்மே. இந்த இவள் நமதுறைநெறியினிற்றலால் மனத்தில் அழுக்காறிலள்; அதுவுமன்றி (மலும் மகள்; ஔவியமில்லாள்; அளிக்குந்தன்மையையுடையள்; ஆதலான் மாத ழுது டத்தே இம்மடந்தையை அடைக்கலமாக இற்றைக்குவைப்பதற்கு வருந்தீக ரியி யாதுமில்லையெனத் தன்மனத்தினெண்ணினளாகியென்க. ற்கு

ஆக்களைக்காத்து - வெருவும் பிணியுமுற்றுமழிக் காத்து. ஓம்பி - புலத்தலை புல்லார்த்தி அலைத்தலை நீரூட்டி. ஆப்பயன் - பால்முதலியன. அளிக்குங்கோவலர்- கன்றருத்தி மிக்கதனை யாவர்க்குமளிக்குங்கோவலரென்க. தீது - அழுக்காறு; ஆவது மனத்தழுக்கு. செவ்வியள் - ஔவியமில்லாள்; ஆவது மனக்கோட்டமில லென்றபடி. அளியள் - யாவரானும் அளிக்கத்தக்காள்.

க௨௫-க௩௦. மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்
றாதையைக் கேட்கிற் றன்குல வாண
ரரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப படுத்துவ
ருடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவு
மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்

இ - ள். மாதரி, கேளாய்; இம்மடந்தையுடையகணவன் தந்தைபெயரைக் கேட்பாராயின், இவன்குலத்திலுள்ள இவ்வூரில்வாழ்வோர் பெறுதற்கரியபொரு ளைப் பெற்றாரைப்போல நல்விருந்தாக எதிர்கொண்டு கரிய பெரிய கண்ணினை யுடையாளோடு இவனைத் தங்கள் காவலையுடைய மனையகத்தே கொண்டுசென்று வைத்துக்கொள்வார்கள்; அங்ஙனமாகிய உடைய பெரிய செல்வரது மனையகத்தே சென்றுபுகுமளவும் இடைக்குலமடந்தாய்! உனக்கு நான் இவளை அடைக்கலமாகத் தந்தேனென்றாரென்க.

க௩க-க௩௬. மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கய னெடுங்க ணஞ்சன மூட்டித்
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து
தூமடி யுடீஇத் தொல்லோர் சிறப்பி
ளாயமுங் காவலு மாயிழை தனக்குத்
தாயு நீயே யாகித் தாங்கு

இ - ள். இவ்வுயர்குடியிற்பிறந்த இவளை நின்கையில் அடைக்கலமாகத்தந்தே னாதலால், இம்மடந்தையை மங்கலநீராலாட்டிச் சிவந்த கயல்போலும் நெடிய கண்ணின் அஞ்சனத்தையுமெழுதி நறிய மெல்லிய கூந்தலிலே சிலவாகிய மலரைப் பெய்து தூய மடிப்புடைவையையுடுத்து இவ்வாயிழைக்கு ஆயமகளிரும் செவிலித் தாயரும் நற்றாயும் நீயேயாய்த் தாங்குவாயாகவென்றாரென்க.

தொல்லோர்சிறப்பினாயம் - பழையோராகச் சிறப்பித்துக் கூறப்பட்டவாயம். ஆட்டி ஊட்டிப் பெய்து உடீஇத் தாங்கென்றாரென்க.

௧௩௬-௧௩௮. ௩௬௦

என்னொடு போந்த விளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்

இ - ள். இப்படித்துயருறுதற்கு என்னோடுபோந்த இளையகொடிபோலும் நங்கையுடைய அழகிய சிறியவடியை முன்பு மண்மகளும் கண்டறியாள் ;

இவளடியைப் பூமிதேவியும் கண்டறியாளென்றது அகம்விட்டுப்புறப்பட்டறியாளென்றவாறு. இனி மண்மகள் இவள் மென்மையைத் தானறிந்துநெகிழ்ந்திலளென்றுமாம். இன்னும் கால் கொப்புளங்கொண்டு நிலத்திற்பாவாமையிற் கூறினாரெனினுமமையும்.

௧௩௯-௧௪௯. கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி
யின்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட வித்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டி ரிருந்தநா டென்னு
மத்தகு நல்லுரை யறியா யோநீ

இ - ள். கதிரின்வெம்மையால் தன் காதலன்மெய் வருந்தியதென்று நடுங்கித் துயரமுற்று நாவும்புலரவாடித் தன்றுயரென வேறுகாணாத பெருமையமைந்த பூங்கொடியை ஒப்பாள், தங்காதலர்க்கு இல்வாழ்க்கைத்துணையாகிய மாதர்க்கு இன்றியமையாத கற்பைக்கடமாகப்பூண்டுகொண்ட இத்தெய்வமேயல்லது வேறு பொலிவினையுடைய தெய்வத்தினை யாம்கண்டிலேம் ; அதுவுமன்றிக் காலமழை பொய்த்தறியாது ; வளம் பிழைத்தலையறியாது ; வேந்தர்கொற்றம் சிதைந்தறியாது ; அஃது எந்தநாடெனிற் பத்தினிப்பெண்டிரிருந்த நாடென்று நல்லோர்சொல்லும் அத்தகுமிகுதியையுடைய தருமநூலுரையை நீயறிவையோ அறியாயோவென்றாரென்க.

*இன்பதுன்பம் தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய்வருதலின், தன்றுயர் காணாவென்றார். கற்பைக் கடமாகப்பூண்ட பூங்கொடியாகிய இத்தெய்வமென்க.

௧௫௦-௧௫௦. தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினு
மிகப்பே ரின்பந் தருவது கேளாய்

* திருச்சிற்றம்பலக்கோவையார், ௭௧:—காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவ, ராகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமா, மேகத் தொருவ னிரும்பொழி லம்பல வன்மலையிற், றோகைக்குந் தோன்றற்கு மொன்றாய் வருமின்ப துன்பங்களே.

இ - ள். தவத்தினராயுள்ளோர் தாங்கொடுத்த அடைக்கலந்தான் அப்போது சிறிதாயிருப்பினும் பின்பு மிகப்பேரின்பத்தைத்தருவதை யான்சொல்ல நீ கேளா யென்றாரென்க.

ஆய் - அசை.

கருக - கருரு. காவிரிப் படப்பைப் பட்டினந் தன்னுட்
பூவிரி பிண்டிப் பொதுநீங்கு திருநிழ
லுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
விலகொளிச் சிலாதல மேலிருந் தருளித்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தம்முன்

இ - ள். காவிரியைத் தோட்டக்கூற்றிற்கு எல்லையாகவுடைய பட்டினத்துள்ளே பூவிரிந்த பொதுமைநீங்கின அழகியநிழலையுடைய பிண்டிமுதற்கண்ணே சாவகர் ஒருங்குகூடியிட்ட விளங்கொளிச் சிலாதலத்தின்மீதேயிருந்து தருமத்தை யாவர்க்கும்போதிக்கும் சாரணர் முன்பாகவென்க.

படப்பை - பக்கமுமாம். பொதுநீங்குதிருநிழல் - பிறிதொருமரத்திற்கின்றித் தனக்கேயுரிய நிழல்; ஆவது ஆதித்தன்சாயச் சாயாநிழல். உலகநோன்பிகள் - துறவாது விரதங்காக்குஞ்சாவகர். சிலாதலம் - அப் பட்டினத்துச் சிலாதலம்.

கருசு - கசுo. திருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்
றாரன் மாலையன் றமணியப் பூணினன்
பாரோர் காணாப் பலர்தொழு படிமையன்
கருவிரற் குரங்கின் கையொரு பாகத்துப்
பெருவிறல் வானவன் வந்துநின் றோனை

இ - ள். திருவிற்போல ஒளிவிட்டு அழகுதரும் திருமேனியையுடையனாய்த் தாரையுடையனாய் மாலையையுடையனாய்ப் பொற்பூணினையுடையனாய் மக்கள்கண்ணிற்குப்புலப்படாத தேவர்பலருந்தொழும் படிவையுடையவன் ஒருபாகத்துக்கை கருவிரற்குரங்கின் கையாகவுடைய தேவனொருவன் வந்துநின்றான்; நின்றவனை யென்க.

திருவில் - இந்திரவில். வில்லிட்டென்பதற்குத் தாமத்தானவொளியைப் புறப்படவிட்டென்பாருமுளர். தார் - பூமாலை. மாலை - மணிமாலை. தாரமாலை யெனப்பாடமோதி, மந்தாரமாலையையுடையனெனினுமமையும். படிமை - தெய்வ வடிவு. பெருவிறல் - பெரியவெற்றி. நின்றோனை - *"ஆவோ வாகும்" என்பதனான்முடியும்.

கசுக - கசுஉ. சாவக ரெல்லாஞ் சாரணர்த் தொழுதீங்
கியாதிவன் வரவென விறையோன் கூறும்

இ - ள். அச்சிலாதலத்தின்கீழிருந்து அறங்கேட்டசாவகரெல்லாரும் எழுந்து சாரணரைத்தொழுது இவன் இங்ஙனம்வந்தவரவிற்குக் காரணம்யாதெனக்கேட்பச் சாரணர்கூறுவார் :—

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், கசு.

கசுரு—ககூக. எட்டி சாயல னிருந்தோன் றனாது
பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையிலோர்
மாதவ முதல்வனை மனைப்பெருங் கிழத்தி
யேத நீங்க வெதிர்கொ ளமையத்
தூர்ச்சிறு குரங்கொன் றொதுங்கியுள் புக்குப்
பாறபடு மாதவன் பாதம் பொருந்தி
யுண்டொழி மிசசிலு முகுத்த நீருந்
தண்டா வேட்கையிற றான்சிறி தருந்தி
யெதிர்முக நோக்கிய வின்பச் செவ்வியை
யதிராக் கொள்கை யறிவனு நயந்துமின்
மக்களி னோம்பு மனைக்கிழத் தியென
மிக்கோன் கூறிய மெய்ம்மொழி யோம்பிக்
காதற் குரங்கு கடைநா ளெய்தவுந்
தானஞ் செய்வுழி யதற்கொரு கூறு
நீதா றென்றே செய்தன ளாதலின்
மதிமை நன்னாட்டு வாரணந் தன்னு
ளுத்தர கௌத்தற் கொருமக னாகி
யுருவினுந் திருவினு முணாவினுந் தோன்றிப்
பெருவிறற் றானம் பலவுஞ் செய்தாங்
கெண்ணா லாண்டி லிறந்த பிற்பாடு
விண்ணோர் வடிவம் பெற்றன னாதலிற்
பெற்ற செல்வப் பெரும்பய னெல்லாந்
தற்காத தளித்தோ டானச் சிறப்பெனப்
பண்டைப் பிறப்பிற் குரங்கின் சிறுகை
கொண்டொரு பாகத்துக் கொள்கையிற் புணர்ந்த
சாயலன் மனைவி தானந் தன்னா
லாயின னிவ்வடி வறிமீரோ வெனச்
சாவகர்க் கெல்லாஞ் சாற்றினன் காட்டத்
தேவ குமரன் றோன்றின னென்றலும

இ - ள். எட்டிப்பட்டத்தையுடைய சாயலனென்னும் வாணிகன் துறவாது இல்லறத்திருந்தவன்றனது உண்ணாவிரதத்தையுடையோர்பலரும் புகும் மனையகத்தே அவன்மனைக்கிழத்தி ஒரு பெரிய தவமுதல்வனைத் தன்வினைநீங்க எதிர்கொள்கின்ற பொழுதின்கண் அவ்வூரிடத்துத் தூரப்புண்டு உணவும்பெறாது சிறுமையுற்றதோர் கருங்குரங்கு அச்சத்தோடு ஒதுங்கிவந்து உள்புக்கு அருளறத்தின்பகுதிப்பட்ட மாதவனுடைய பாதத்தின்வணங்கி அவன் உண்டொழிந்த அன்னத்தையும் கைகழீஇய நீரையுஞ் சிறிதருந்திப் பெரும்பசிதீர்ந்து எதிர்முகநோக்கிய முகச்செவ்வியைக்கண்டு சலியாவுள்ளத்தையுடைய அறிவனும் மனமகிழ்ந்து, இல்லறக்கிழத்தி

தன்னை, நீ நின்மக்களின் ஒருதன்மையாக ஓம்புகவெனக் கைப்படுப்ப, அவளும் மிக்கோனாற்கூறப்பட்ட மெய்ம்மொழியைத் தப்பாமற் பரிகரித்தொழுகாநிற்கின் றுழி, அங்ஙனங்காதலித்த அக்குரங்கு மரிக்க, அதனுடைய ஒருகூற்றைத் தானஞ் செய்கின்ற மனைக்கிழத்தி இதன் நீயபிறப்பறுகவெனச் செய்தனளாதலானே மத் திமதேசத்து வாரணவாசியென்னுநகரியின் உத்தரகௌத்தனென்னுமரசனுக்கு ஒருமகனாய் அழகினோடும் மெய்ப்பொறியோடும் உணர்வோடுந்தோன்றி மிக்க தானசூரனாய்ப் பலவகைப்பட்ட தானங்களையுஞ்செய்து அந்த அரசுரிமையிலே முப்பத்திரண்டாண்டிருந்து பின்பு தெய்வயாக்கைபெற்றனன்; ஆதலானே அங்ங னம்பெற்ற சேமத்தான பெரும்பயனெல்லாம் தன்னைக்காத்தளித்தவள்செய்த தானத் தாற்பெற்ற சிறப்பென்று உட்கொண்டு முற்பிறப்பிற் கருங்குரங்கானவடிவிற் சிறியகையைத் தனது பெரிய ஒருபாகத்தேகொண்டு நன்மைக்கூற்றிலேபொருந் திய சாயலனுடைய மனையாள் தலைநாளிற்செய்த தானத்தாலே இந்தவடிவாயி னேன்; இதனை நீங்களறிமினென்று சாவகநோன்பிகட்கெல்லாம் விளங்க அறி வித்தற்குத் தேவகுமாரன் இங்ஙனந்தோன்றினனென்றுசொல்லவுமென்க.

பட்டினிநோன்பிகள் - இரண்டு உவாவும் அட்டமியும் முட்டுப்பாடும் பட்டினி விட்டுண்ணும் விரதிகள். சிறுகுரங்கு - மெலிந்தகுரங்கு. கடைநாள் - மரணம். ஒருகூறென்றார்; பிள்ளைகளோர்பாதியை. உத்தரன் கவிப்பற் கொருமக னாகி யெனப்பாடமோதி, இக்குரங்கு உத்தரனென்னும்பெயரோடு கவிப்பனென்னும் வாணிகற்கு ஒருமகனாகப் பிறந்தெனபாருமுளர்.

௧௯௨-௧௯௭. சாரணர் கூறிய தகைசா னன்மொழி
யாரணங் காக வறந்தலைப் பட்டோ
ரன்றப் பதியு ளருந்தவ மாக்களுந்
தன்றறல் வாழ்க்கைச் சாவக மாக்களு
மிட்ட தானத் தெட்டியு மனைவியு
முட்டா வின்பத்து முடிவுல கெய்தினர்

இ-ள். அங்ஙனம் சாரணர்கூறிய பெருமையமைந்த நன்மொழியைத் தெய்வ வாக்கியமாகக்கொண்டு அறத்தின்கட்டலைப்பட்டு அப்பதியிலிருந்த அருந்தவமாக் களும் தவத்தினாக்கெல்லாம் பொதுப்பட்டவாழ்க்கையையுடைய சாவகமாக்களும் தானமிட்ட எட்டியும் மனைவியும் முட்டாத இன்பத்தையுடைய வீட்டுலகத்தைப் பெற்றார்கள்காணென்றாரென்க.

தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினு மிகப்பே ரின்பந் தருவது கேளா யென்றவர் இங்ஙனங்கூறினாரென்க. தன்றறல்வாழ்க்கை - தனதென்னுந் தன்மை யில்லாதவாழ்க்கை; *"மன்றில் வதியுநா சேட்புலப பரிசிலர், வெல்போர்ச் சே எய் பெருவிற லுள்ளி, வந்தோர் மன்ற வளியர் தாமென" என்றார் மலைபடுகடா த்திலும்.

௧௯௮-௨00. கேட்டனை யாயினித் தோட்டார் குழலியொடு
நீட்டித் திராது நீபோ கென்றே
கவுந்தி கூற வுவந்தன ளேத்தி

* மலைபடுகடாம், ௪௯௨ - ௪௯௪.

இ - ள். என்னுடைய தனிமைமிக்கதுயரைக்கண்டுவைத்தும் இதற்கு இவள் இடருறுமென நினைக்கின்றிலீர்; அதுநிற்க; நம்முடைய சந்தனுதிகளாலாடப்பட்ட பொன்போலுந்திருமேனி பொடியாடிக்கிடக்கத்தகுவதொன்றோ; அஃதற்றாயின், மன்னனுற்செய்யப்பட்ட இக்கொலைத்தொழில் இப்பெற்றியான்முடிந்ததென்றறியாத எனக்கு முற்பவத்திற்செய்த என்றீவினைகாணிதுவென்று இந்நாட்டிற்சொல்லார்களோவென்க.

இஃது அழுகையைச்சார்ந்தவெகுளி. மேல் வருவனவற்றிற்குங்கொள்க.

௪௫-௪௬. யாருமின் மருண்மாலை யிடருறு தமியேன்முன்
றார்மலி மணிமார்பந் தரைமூழ்கிக் கிடப்பதோ
பாரமிகு பழிதூற்றப் பாண்டியன தவறிழைப்ப
வீர்வதோர் வினைகாணு மிதுவென வுரையாரோ

இ - ள். துணைப்படுதற்கு ஒருவருமற்ற மருட்சியையுடைய இம்மாலைக்காலத்தே மிக்கதுன்பமுறாநின்ற தனித்தியேன் கண்முன்பே நம்முடைய மாலைத்திரளுக்குள்ளேமுழுகும் திருமார்பம் வெறுநிலத்தே முழுகிக்கிடக்கத்தகுவதொன்றோ; அஃதற்றாயின், பாரிலுள்ளார் மிகவும் பழிதூற்றுதற்குக்காரணமாகப் பாண்டியன் தவற்றையெண்ண வெட்டுவிப்பதோர் தீவினைகாணிதுவென்று இந்நாட்டிற்சொல்லார்களோவென்றாளென்க.

வெட்டிக் கவிழ்த்தமைதோன்ற மார்பம் தரைமூழ்கிக்கிடப்பதோவென்றாள்.

௪௭-௫௦. கண்பொழி புனல்சோருங் கடுவினை யுடையேன்முன்
புண்பொழி குருதியிராய்ப் பொடியாடிக் கிடப்பதோ
மண்பதை பழிதூற்ற மன்னவன் றவறிழைப்ப
வுண்பதோர் வினைகாணு மிதுவென வுரையாரோ

இ-ள். கண்கள் பொழியும்புனலைச் சொரியாநிற்கின்ற தீவினைப்பயனையுடைய என்னுடையகண்முகப்பே வெட்டுவாயினின்றுங்குதித்துப் பெருகுகின்ற குருதியையுடையீராய்ப் பொடியாடிக்கிடக்கத்தகுவதொன்றோ; அஃதற்றாயின், மண்ணிலுள்ளோர்பலரும் பழிதூற்றுதற்குக்காரணமாக மன்னவன் தவற்றையெண்ண அங்காவதோர்வினைகாணிதுவென்று நாட்டிற் சொல்லார்களோவென்றாளென்க.

இர் - முன்னிலைப்பன்மைக்கண்வந்தது ஈண்டு ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியாயிற்று. கிடப்பதோ - பிரிநிலை. உண்பதோர்வினையென்பதற்கு உயிரையுண்பதோர்வினையென்பதும்பொருள்; *"ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது" என்றார்பிறரும். இவைமூன்றும் முதுபாலை; என்னை? "நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து, தனிமகன் புலம்பன் முதுபாலை யாகும்" என்பதனால்.

* மணிமேகலை, ஆறவது சக்கரவாளக்கோட்டம்புக்க காதை: "ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது, மாபெருந் துன்ப மொழிவா யென்றலு, மென்னுயிர் கொண்டிவ னுயிர்தந் தருளிலென், கண்ணில் கணவனை யிவன்காத் தோம்பிடு, மிவனுயிர் தந்தென் னுயிர்வாங் கென்றலும்."

௫௧-௫௩. பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
கொண்ட கொழுந ருறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்

பெண்டிர் - கற்புடைமகளிர். கொண்டகொழுநர் - தம்மை நெஞ்சினுட் கொண்டகொழுநர். அவருறுகுறையைத்தாங்கும் பெண்டிர் - அவருற்றபிணிக்கும் மனத்துயர்க்கும் மெய்யாகத் தாங்கும்பெண்டிர். அன்றி உறுகுறைதாங்குதல் - பொதுமகளிரிடைப்பிரிதலும் அவரோடு கலந்தசெவ்வியும் புணர்ச்சிக்குறிகளுங்கண்டுழியும் அவர் தெருட்டத்தெருண்டு குறையுறப்பொறுத்தலுமாம். தாங்குறூஉம் - வினைத்திரிசொல்.

௫௪-௫௬. சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டுகொல்
ஈன்ற குழவி யெடுத்து வளர்க்குறூஉஞ்
சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டுகொல்

ஈன்ற ... ... ... வளர்க்குறூஉம் - பிள்ளைப்பேறுவளர்க்குமென்னும்வழக்கு.

௫௭-௫௯. தெய்வமு முண்டுகொ றெய்வமு முண்டுகொல்
வைவாளிற் றப்பிய மன்னவன் கூடலிற்
றெய்வமு முண்டுகொ றெய்வமு முண்டுகொல்

கொல் - ஐயம்.

இ - ள். கூர்த்தவாளால் என்கொழுநனைத்தவறுதலாற் கோல்கோடிய மன்னனுடைய இக்கூடலென்னுநகரிடத்துப் பெண்டிரும் சான்றோரும் தெய்வமுமுண்டோ; உண்டாயின்; இவ்வநியாயம்பிறவாது; ஆதலால் இல்லையென்றாளென்க.

௬0-௬௭. என்றிவை சொல்லி யழுவாள் கணவன்றன்
பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள
நின்றா னெழுந்து நிறைமதி வாண்முகங்
கன்றிய தென்றவள் கண்ணீர்கை யான்மாற்ற
வழுதேங்கி நிலத்தின்வீழ்ந் தாயிழையா டன்கணவன்
றொழுதகைய திருந்தடியைத் துணைவளைக்கை யாற்பற்றப்
பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளா
னெழுதெழின் மலருண்க ணிருந்தைக்க வெனப்போனான்

இ - ள். என்று இன்னனசொல்லி அழுகின்றவள் தன்கணவனுடைய திருத்துஞ்சுமார்பம் தன்மார்போடுபொருந்தும்படி தழுவிக்கொண்டாளாக; எழுந்திருந்துநின்றவன், நிறைந்தமதிபோலும் ஒளிபொருந்தியமுகம் கன்றியதேயென்று வாக்காற்சொல்லிக் கையாலே அவள் கண்ணீரை மாற்றினான்; மாற்றியபின்பு அவ்வாயிழையாள் ஏங்கியழுது நிலத்தின்கண்ணேவீழ்ந்து தன்கணவனுடைய தொழுந்தகையையுடைய திருந்திய அடியினை இரண்டுகையாலும் பூண்டுகொண்டாளாக; இப்பொல்லாதவுடம்பைக் கைவிட்டுச் சுவர்க்கம்புகுதற்கு எழுந்திருந்தவன் நீ இருக்கவென்றுசொல்லிப் பல அமரர்குழாத்துள்ளானானென்க.

பழுது நீதென்ப உடம்புக்குப்பெயர்; "திருந்திய நின்மகன் றீது நீங்கினான்" என்றார்பிறரும். இனி முன்பே பழுதொழிந்தெழுந்திருந்தவன் அமரர்குழாத்துள்

ளான் தழீஇக்கொள்ள எழுந்திருந்துநின்றவன் மாற்றப் பின் இருந்தடியைத் துணை வளைக்கையாற்பற்ற, உண்கண், இருந்தைதக்கவெனப்போனுளெனக் கூட்டலுமொன்று. எழுந்திருந்தான் குழாத்துள்ளான் நின்றானென்னும்பெயர்கள் அடுக்கிவந்து போனுளென்னும் பயனிலைகொண்டுமுடிந்தன.

௬அ-௭௧. மாயங்கொன்மற்றென்கொன்மருட்டியதோர்தெய்வங்கொல்
போயெங்கு நாடுகேன் பொருளுரையோ விதுவன்று
காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன்
றீவேந்தன் றனைக்கண்டித் திறங்கேட்பல் யானென்றாள்

இ - ள். இங்ஙனம் எழுந்திருந்துநின்றது மாயமோதான்? அஃதன்றாயிற் பின்னை யாதுதான்? என்மனத்தை மருட்டியதோர்தெய்வமோதான்; ஒன்றையுந்தெளிகின்றிலேன், ஆதலால் எங்கும்போயாராய்ந்துகூடுவேன்; அங்ஙனங்கூடுதல் எளிதாயினும் எனது மிக்கசினந் தணிந்தாலன்றிக் கூடேன்; இச்சினந்தணிதற்கு அக்கொடியவேந்தனை யான் சென்றுகண்டு என்கணவனைக்கொன்ற இத்தீத்திறம் யாதென்றுகேட்பேனென்று தன்னெஞ்சொடுகூறினாளென்க.

தெய்வங்கொலென்றாள்; இருதுணியாகிய உடல்கூடி ஒருயிர்பெற்றுநின்றமைபற்றி. பொருளுரையன்றென்றாள்; தன்பின்போதாமைபற்றி. கேட்பல் யானென்றாள்; நாணழிபூசல்செயத்துணிந்து.

௭௨-௭௫. என்றா ளெழுந்தா ளிடருற்ற தீக்கனா
நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர்சோர
நின்றா ணினைந்தா ணெடுங்கயற்க ணீர் துடையாச்
சென்றா ளரசன் செழுங்கோயில் வாயின்முன்.

இ - ள். இங்ஙனஞ்சொன்னவள் ஆண்டுப்போதற்கெழுந்தாள்; எழுந்தவள் தன்னூரிற்கண்டதீக்கனாவை நின்றுநினைந்தாள்; நினைந்தவள் கண் நீர் சோர்தலால் தான்செல்லும்வழிகாண்டற்காக அந்நெடிய கயல்போலுங் கண்கள்சொரியும் புனலைத்துடைத்து அரசனுடைய வளவிய கோயில்வாயிலிடத்தே சென்றாளென்க.

என்றாளென்னுமெழுவாய்க்குச் சென்றாளென்பதனைப் பயனிலையாக்குக.

இனிப் பெருந்தேவிசெய்தி கூறுகின்றார்.

இஃது அயன்மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

பருந்து நிழலுமென ... ...அடியார்க்குநல்லானென்பான்.

ஒருந்தமிழ் ... ... ... ...நிரம்பையர்காவலனே.

காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

ஊர்சூழ்வரி முற்றிற்று.

## இருபதாவது

## *வழக்குரைகாதை.

ஆங்குக்
குடையொடு கோல்வீழ நின்று நடுங்குங்
கடைமணி யின்குரல் காண்பென்கா ணெல்லா
திசையிரு நான்கு மதிர்ந்திடு மன்றிக்
கதிரை யிருள்விழுங்கக் காண்பென்கா ணெல்லா
விடுங்கொடி வில்லிர வேபகல் வீழுங்
கடுங்கதிர் மீனிவை காண்பென்கா ணெல்லா
கருப்பம்
செங்கோலும் வெண்குடையுஞ் செறிநிலத்து மறிந்துவீழ்தரு
நங்கோன்றன் கொற்றவாயின் மணிநடுங்க நடுங்குமுள்ள
மிரவுவில்லிடும் பகன்மீன்விழு மிருநான்கு திசையுமதிர்ந்திடும்
வருவதோர் துன்பமுண்டு மன்னவற்குயா முரைத்துமென
வாடியேந்தினர் கலனேந்தின ரவிர்ந்துவிளங்கு மணியிழையினர்
கோடியேந்தினர் பட்டேந்தினர் கொழுந்திரையலின் செப்பேந்தினர்
வண்ணமேந்தினர் சுண்ணமேந்தினர் மான்மதத்தின் சாந்தேந்தினர்
கண்ணியேந்தினர் பிணையலேந்தினர் கவரியேந்தினர் தூபமேந்தினர்
கூனுமூமுங் குறளுங்கூடிய குறுந்தொழிலிளைஞர் செறிந்துசூழ்தர
நரைவிரைஇய நறுங்கூந்தல ருரைவிரைஇய பலர்வாழ்த்த
வீண்டுநீர் வையங்காக்கும் பாண்டியன்பெருந் தேவிவாழ்கென
வாயமுங் காவலுஞ்சென் றடியீடு பரசியேத்தக்
கோப்பெருந் தேவிசென்றுதன் றீக்கனாத் திறமுரைப்ப
வரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன்
றிருவீழ் மார்பிற் றென்னவர் கோவே; இப்பால்
வாயி லோயே வாயி லோயே
யறிவறை போகிய பொறியறு நெஞ்சத்
திறைமுறை பிழைத்தோன் வாயி லோயே
யிணையரிச் சிலம்பொன் றேந்திய கையள்

* இக்காதைமுதலிய பதினொன்றற்கும் அடியார்க்குநல்லாருரை அகப்படவில்லை.

கணவனை யிழந்தாள் கடையகத் தாளென்
றறிவிப் பாயே யறிவிப் பாயே, யென
வாயிலோன், வாழியெங் கொற்கை வேந்தே வாழி
தென்னம் பொருப்பின் றலைவ வாழி
செழிய வாழி தென்னவ வாழி
பழியொடு படராப் பஞ்சவ வாழி
யடர்த்தெழு குருதி யடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீட மேறிய மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்ல
ளறுவர்க் கிளைய நங்கை யிறைவனை
யாடல்கண் டருளிய வணங்கு சூருடைக்
கானக முகந்த காளி தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்
செற்றனள் போலுஞ் செயிர்த்தனள் போலும்
பொற்றொழிற் சிலம்பொன் றேந்திய கையள்
கணவனை யிழந்தாள் கடையகத் தாளே
கணவனை யிழந்தாள் கடையகத் தாளே, யென
வருக மற்றவள் றருக வீங்கென
வாயில் வந்து கோயில் காட்டக்
கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி
நீர்வார் கண்ணை யெம்முன் வந்தோ
யாரை யோநீ மடக்கொடி யோயெனத்
தேரா மன்ன செப்புவ துடையே
னெள்ளறு சிறப்பி னிமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் டீர்த்தோ னன்றியும்
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்ற
னரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகாரென் பதியே யவ்வூ
ரேசாச் சிறப்பி னிசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி
வாழ்தல் வேண்டி யூழ்வினை துரப்பச்
சூழ்கழன் மன்ன நின்னகர்ப் புகுந்திங்
கென்காற் சிலம்பு பகர்தல் வேண்டி நின்பாற்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி யென்பதென் பெயரே யெனப், பெண்ணணங்கே

௫௫

கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று
வெள்வேற் கொற்றங் காணென வொளியிழை
நற்றிறம் படராக் கொற்கை வேந்தே
யென்காற் பொற்சிலம்பு மணியுடை யரியே, யெனத்
தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே
தருகெனத் தந்து தான்முன் வைப்பக்
கண்ணகி யணிமணிக் காற்சிலம் புடைப்ப
மன்னவன் வாய்முதற் றெறித்தது மணியே, மணிகண்டு
தாழ்ந்த குடையன் றளர்ந்தசெங் கோலன்
பொன்செய் கொல்லன் றன்சொற் கேட்ட
யானோ வரசன் யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவ
லென்முதற் பிழைத்தது கெடுகவென் னாயுளென
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தன ணடுங்கிக்
கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்
றிணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி.

*அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும்
பல்லவையோர் சொல்லும் பழுதன்றே - பொல்லா
வடுவினையே செய்த வயவேந்தன் றேவி
கடுவினையேன் செய்வதூஉங் காண்.

காவி யுகுநீருங் கையிற் றனிச்சிலம்பு
மாவி குடிபோன வவ்வடிவும் - பாவியேன்
காடெல்லாஞ் சூழ்ந்த கருங்குழலுங் கண்டஞ்சிக்
கூடலான் கூடாயி னான்.

மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலுங்
கையிற் றனிச்சிலம்புங் கண்ணீரும் - வையைக்கோன்
கண்டளவே தோற்றானக் காரிகைதன் சொற்செவியி
லுண்டளவே தோற்றா னுயிர்.

வழக்குரைகாதை முற்றிற்று.

* மூதுரை, உ௭ ; நான்மணிக்கடிகை, ௮௫.

# இருபத்தொன்றாவது

# வஞ்சினமாலை.

கோவேந்தன் றேவி கொடுவினை யாட்டியே
னியாவுந் தெரியா வியல்பினே னாயினு
*முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றிகா ணற்பகலே
வன்னி மரமு மடைப்பளியுஞ் சான்றாக
முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள் பொன்னிக்
கரையின் மணற்பாவை நின்கணவ னாமென்
றுரைசெய்த மாதரொடும் போகாள் திரைவந்
தழியாது சூழ்போக வாங்குந்தி நின்ற
வரியா ரகலல்குன் மாத ருரைசான்ற
மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
றன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கன்னவி றோளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள் மன்னி
மணன்மலி பூங்கானல் வருகலன்க ணோக்கிக்
கணவன்வரக் கல்லுருவ நீத்தா ளிணையாய
மாற்றாள் குழவிவிழத் தன்குழவி யுங்கிணற்று
வீழ்த்தேற்றுக் கொண்டெடுத்த வேற்கண்ணாள் வேற்றொருவ
னீணோக்கங் கண்டு நிறைமதி வாண்முகத்தைத்
தானோர் குரக்குமுக மாகென்று போன
கொழுநன் வரவே குரக்குமுக நீத்த
பழுமணி யல்குற்பூம் பாவை விழுமிய
†பெண்ணறி வென்பது பேதைமைத்தே யென்றுரைத்த
நுண்ணறிவி னோர்நோக்க நோக்காதே யெண்ணிலேன்
வண்ட லயர்விடத்தி யானோர் மகட்பெற்றா
லொண்டொடி நீயோர் மகற்பெறிற் கொண்ட

* திருக்குறள், இன்னாசெய்யாமை, ௯: "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்."

† "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே."

கொழுந னவளுக்கின்றி யானுரைத்த மாற்றங்
கெழுமி யவளுரைப்பக் கேட்ட விழுமத்தால்
சிந்தைநோய் கூருந் திருவிலேற் கென்றெடுத்துத்
தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்டாளாய் முந்தியோர்
கோடிக் கலிங்க முடுத்துக் குழல்கட்டி
நீடித் தலையை வணங்கித் தலைசுமந்த
வாடகப்பூம் பாவை யவள்போல்வார் நீடிய
மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்
பட்டாங்கி யானுமோர் பத்தினியே யாமாகி
லொட்டே னரசோ டொழிப்பேன் மதுரையுமென்
பட்டிமையுங் காண்குறுவாய் நீயென்னா விட்டகலா
நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும்
வானக் கடவுளரு மாதவருங் கேட்டீமின்
யானமர் காதலன் றன்னைத் தவறிழைத்த
கோநகர் சீறினேன் குற்றமிலேன் யானென்
றிடமுலை கையாற் றிருகி மதுரை
வலமுறை மும்முறை வாரா வலமந்து
மட்டார் மறுகின் மணிமுலையை வட்டித்து
விட்டா ளெறிந்தாள் விளங்கிழையாள் வட்டித்த
நீல நிறத்துத் திரிசெக்கர் வார்சடைப்
பால்புரை வெள்ளெயிற்றுப் பார்ப்பனக் கோலத்து
மாலை யெரியங்கி வானவன் றான்றோன்றி
மாபத் தினிநின்னை மாணப் பிழைத்தநாட்
பாயெரி யிந்தப் பதியூட்டப் பண்டேயோ
ரேவ லுடையேனா லியார்பிழைப்பா ரீங்கென்னப்
*பார்ப்பா ரறவோர் பசுபத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று காய்த்திய
பொற்றொடி யேவப் புகையழன் மண்டிற்றே
நற்றேரான் கூட னகர்.

---

பொற்பு வழுதியுந்தன் பூவையரு மாளிகையும்
விற்பொலியுஞ் சேனையுமா வேழமுங் - கற்புண்ணத்
தீத்தரு வெங்கூடற் றெய்வக் கடவுளரு
மாத்துவத் தான்மறைந்தார் மற்று.

**வஞ்சினமாலை முற்றிற்று.**

---

* ஆசாரக்கோவை, கூரு.

## இருபத்திரண்டாவது

# அழற்படுகாதை.

ஏவ றெய்வத் தெரிமுகந் திறந்தது
காவற் றெய்வங் கடைமுக மடைத்தன
வரசர் பெருமா னடுபோர்ச் செழியன்
வளைகோ விழுக்கத் துயிராணி கொடுத்தாங்
கிருநில மடந்தைக்குச் செங்கோல் காட்டப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
னரசு கட்டிலிற் றுஞ்சிய தறியா
தாசான் பெருங்கணி யறக்களத் தந்தணர்
காவிதி மந்திரக் கணக்கர் தம்மொடு
கோயின் மாக்களுங் குறுந்தொடி மகளிரு
மோவியச் சுற்றத் துரையவிந் திருப்பக்
காழோர் வாதுவர் கடுந்தே ரூருநர்
வாய்வாண் மறவர் மயங்கினர் மலிந்து
கோமகன் கோயிற் கொற்ற வாயிற்
றீமுகங் கண்டு தாம்விடை கொள்ள
நித்திலப் பைம்பூ ணிலாத்திக ழவிரொளித்
[தண்கதிர் மதியத் தன்ன மேனிய
னொண்கதிர் நித்திலம் பூணொடு புனைந்து
வெண்ணிறத் தாமரை யறுகை நந்தியென்
றின்னவை முடித்த நன்னிறச் சென்னிய
னுரையென விரிந்த நுண்பூங் கலிங்கம்
புலரா துடுத்த வுடையினன் மலரா
*வட்டிகை விளம்பொரி வன்னிகைச் சந்தனங்
கொட்டமோ டரைத்துக் கொண்ட மார்பினன்
றேனும் பாலுங் கட்டியும் பெட்பச்
சேர்வன பெறூஉந் தீம்புகை மடையினன்
றீர்த்தக் கரையுந் தேவர் கோட்டமு
மோத்தின் சாலையு மொருங்குட னின்று

* இவ்வடியின்பொருள் நன்குவிளங்கவில்லை.

பின்பகற் பொழுதிற் பேணின னூர்வோ
னன்பகல் வரவடி யூன்றிய காலினன
விரிகுடை தண்டே குண்டிகை காட்டம
பிரியாத் தருப்பை பிடித்த கையின
னோதினு மாயினு நவின்ற நாவினன்]
முத்தீ வாழ்க்கை முறைமையின் வழாஅ
வேத முதல்வன் வேள்விக் கருவியோ
டாதிப் பூதத் ததிபதிக் கடவுளும்
[வென்றி வெங்கதிர் புரையு மேனியன்
குன்று மணியொடு புனைந்த பூணினன, பூணொடு
முடிமுதற் கலன்கள் பூண்டனன் முடியொடு
சண்பகங் கருவிளை செங்கூ தாளந்
தண்கமழ் பூநீர்ச் சாதியோ டினையவை
கட்டுங் கண்ணியுந் தொடுத்த மாலையு
மொட்டிய திரணையோ டொசிந்த பூவின
னங்குலி கையெறிந் தஞ்சுமகன விரித்த
குங்குும வருணங் கொண்ட மா ன்
பொங்கொளி யரத்தப் பூம்பட டயினன்
முகிழ்த்தகைச்
சாலி யயினி பொற்கலத் தேந்தி
யேனு நற்சுவை யியல்புளிக் கொணர்ந்து
வெம்மையிற் கொள்ளு மடையினன செம்மையிற்]
பவளச் செஞ்சுடர் திகழொளி மேனிய
னாழ்கட ஞால மாள்வோன் றனனின
முரசொடு வெண்குடை கவரி நெடுங்கொடி
யுரைசா லங்குசம் வடிவேல் வடிகயி
றெனவிவை பிடித்த கையின னாகி
யெண்ணருஞ் சிறப்பின மன்னரை யோட்டி
மண்ணகங் கொண்டு செங்கோ லோச்சிக்
கொடுந்தொழில் கடிந்து கொற்றங் கொண்டு
நெடும்புகழ் வளர்த்து நானிலம் புரக்கு
முரைசால் சிறப்பி னெடியோ னன்ன
வரச பூதத் தருந்திறற் கடவுளுஞ்
செந்நிறப் பசும்பொன் புரையு மேனியன்
மன்னிய சிறப்பின் மறவேன் மன்னவ
ரரசுமுடி யொழிய வமைத்த பூணினன

வாணிக மாபி னிணில மோம்பி
நாஞ்சிலுந் துலாமு மேந்திய கையின
[னுளைசால் பொன்னிறங் கொண்ட வுடையினன்
வெட்சி தாழை கட்கம ழாம்பல்
சேட னெய்தல் பூளை மருதங்
கூட முடித்த சென்னிய னீடொளிப
பொன்னென விரிந்த நன்னிறச் சாந்தந்
தன்னொடு புனைந்த மின்னிற மார்பினன்
கொள்ளும் பயறுந் துவரையு முழுந்து
நள்ளியம் பலவு நயந்துட னளைஇக
கொள்ளெனக் கொள்ளு மடையினன் புடைநரு
நெல்லுடைக் களனே புல்லுடைக் கழனி
வாணிகப் பீடிகை நீணிழற் காஞ்சிப
பாணிகைக் கொண்டு முற்பகற் பொழுதி
னுண்மகிழ்ந் துண்ணு வோனே யவனே
நாஞ்சிலம் படையும் வாய்ந்துறை துலாமுன்
சூழொளித் தாலு மியாழு மேந்தி
விளைந்துபத மிகுந்து விருந்துபதந் தந்து
மலையவுங் கடலவு மருமபலங் கொணர்ந்து
விலைய வாக வேண்டுநர்க் களித்தாங்]
குழவுதொழி லுதவும் பழுதில் வாழ்க்கைக்
கிழவ னென்போன் கிளரொளிச் சென்னியி
னிளம்பிறை சூடிய விறையவன் வடிவினோர்
விளங்கொளிப் பூத வியன்பெருங் கடவுளுங்
[கருவிளை புரையு மேனிய னரியொடு
வெள்ளி புனைந்த பூணினன் றெளளொளிக
காழகஞ் செறிந்த வுடையினன் காழகிற்
சாந்துபுலர்ந் தகன்ற மார்பின னேந்திய
கோட்டினுங் கொடியினு நீரினு நிலத்தினுங்
காட்டிய பூவிற் கலந்த பித்தையன்
கம்பியர் செய்வினைக் கலப்பை யேந்திச
செம்மையின் வரூஉஞ் சிறப்பப் பொருந்தி]
மண்ணுறு திருமணி புரையு மேனிய
னொண்ணிறக் காழகஞ் சேர்ந்த வுடையின
னூடற் கமைந்த வவற்றொடு பொருந்திப
பாடற் கமைந்த பலதுறை போகிக

கலிகெழு கூடற் பலிபெறு பூதத்
தலைவ னென்போன் றானுந் தோன்றிக்
கோமுறை பிழைத்த நாளி லிந்நகர்
தீமுறை யுண்பதோர் திறனுண் டென்ப
தாமுறை யாச வறிந்தன மாதலின்
யாமுறை போவ தியல்பன் றேவெனக்
கொங்கை குறித்த கொற்ற நங்கைமு
னற்பாற் பூதமும் பாற்பாற் பெயரக்
கூல மறுகுங் கொடித்தேர் வீதியும்
பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவு
முரக்குரங் குயர்த்த வொண்சிலை யுரவோன்
காவெரி யூட்டிய நாள்போற் கலங்க
வறவோர் மருங்கி னழறகொடி விடாது
மறவோர் சேரி மயங்கெரி மண்டக்
கறவையுங் கன்றுங் கனலெரி சேரா
வறவை யாய ரகன்றெரு வடைந்தன
மறவெங் களிறு மடப்பிடி நிரைகளும்
விரைபரிக் குதிரையும் புறமதிற் பெயர்ந்தன
சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை
மைத்தடங் கண்ணார் மைந்தர் தம்முடன்
செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை
நறுமல ரவிழ்ந்த நாறிரு முச்சித்
துறுமலர்ப் பிணையல் சொரிந்த பூந்துகள்
குங்கும மெழுதிய கொங்கை முன்றிற்
பைங்கா ழாரம் பரிந்தன பரந்த
தூமென் சேக்கைத் துனிப்பதம் பாராக்
காமக் கள்ளாட் டடங்கினர் மயங்கத்
திதலை யல்குற் றேங்கமழ் குழலியர்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வரொடு
பஞ்சியார்ந்த வமளியிற் றுஞ்சுதுயி லெடுப்பி
வானைக் கூந்தன் மகளிரொடு போத
வருவிருந் தோம்பி மனையற முட்டாப்
பெருமனைக் கிழத்தியர் பெருமகிழ் வெய்தி
யிலங்குபூண் மார்பிற் கணவனை யிழந்து
சிலம்பின் வென்ற சேயிழை நங்கை
கொங்கைப் பூசல் கொடிதோ வன்றெனப்

பொங்கெரி வானவற் றொழுதன ளேத்தின
ளெண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற
பண்ணியன் மடந்தையர் பயங்கெழு வீதித்
தண்ணுமை முழவந் தாழ்தரு தீங்குழல்
பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்ப் பாணியொடு
நாடக மடந்தைய ராடரங் கிழந்தாங்
கெந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
இந்நாட் டிவ்வூ ரிறைவனை யிழந்து
தேரா மன்னனைச் சிலையின் வென்றிவ்
வூர்தீ யூட்டிய வொருமக ளென்ன
வந்தி விழவு மாரண வோதையுஞ்
செந்தீ வேட்டலுந் தெய்வம் பரவலும்
மனைவிளக் குறுத்தலு மாலை யயர்தலும்
வழங்குகுரன் முரசமு மடிந்த மாநகர்க்
காதலற் கெடுத்த நோயொ டுளங்கனன்
றூதுலைக் குருகி னுயிர்த்தன ளுயிர்த்து
மறுகிடை மறுகுங் கவலையிற் கவலு
மியங்கலு மியங்கு மயங்கலு மயங்கு
மார வுற்ற வீரபத் தினிமுன்
கொந்தழல் வெம்மைக் கூரெரி பொறாஅள்
வந்து தோன்றினள் மதுரா பதியென*.

மாமகளு நாமகளு மாமயிடற் செற்றுகந்த
கோமகளுந் தாம்படைத்த கொற்றத்தா - ணாம
முதிரா முலைகுறைத்தாள் முன்னரோ வந்தாண்
மதுரா பதியென்னு மாது.

அழற்படுகாதை முற்றிற்று.

* இக்காதையில் இருதலைப்பகரத்தினுட்பட்ட பாகங்கள் இரண்டுபிரதிகளில் மட்டுமிருந்தன.

# இருபத்துமூன்றாவது

# கட்டுரைகாதை.



சடையும் பிறையுந் தாழ்ந்த சென்னிக
குவளை யுண்கட் டவளவாண் முகத்தி
கடையெயி றரும்பிய பவளச்செவ் வாய்த்தி
யிணைநிலா விரிந்த நித்தில நகைத்தி
யிடமருங் கிருண்ட நீல மாயினும்
வலமருங்கு பொன்னிறம் புரையு மேனிய
ளிடக்கை பொலம்பூந் தாமரை யேந்தினும்
வலக்கை யஞ்சுடர்க் கொடுவாள் பிடித்தோள்
வலக்கால் புனைகழல் கட்டினு மிடக்காற்
றனிச்சிலம் பரற்றுந் தகைமையள் பனித்துறைக்
கொற்கைக் கொண்கன் குமரித் துறைவன்
பொற்கோட்டு வரம்பன் பொதியிற் பொருப்பன்
குலமுதற் கிழத்தி யாதலி னலம்வர்
தொருமுலை குறைத்த திருமா பத்தினி
யலம்வரு திருமுகத் தாயிழை நங்கைதன்
முன்னிலை யீயாள் பின்னிலைத் தோன்றிக
கேட்டிசின் வாழி நங்கையென் குறையென
வாட்டிய திருமுகம் வலவயிற் கோட்டி
யாரைநீ யென்பின் வருவோ யென்னுடை
யாரஞ ரெவ்வ மறிதி யோவென
வாரஞ ரெவ்வ மறிந்தே னணியிழா அய்
மாபெருங் கூடன் *மதுரா பதியென்பேன
கட்டுரை யாட்டியேன் யானின் கணவற்குப்
பட்ட கவற்சியேன் பைந்தொடி கேட்டி
பெருந்தகைப் பெண்ணொன்று கேளாயென் னெஞ்சம
வருந்திப் புலம்புறு நோய்
தோழிநீ யீதொன்று கேட்டியெங் கோமகற
கூழ்வினை வந்தக் கடை

* மதுராபதியெனுங் கட்டுரையாட்டியேனென்றும்பாடம்.

மாதரா யொன்று கேளுன் கணவற்குத்
தீதுற வந்த வினை; தீதின்
மறைநா வோசை யல்லது யாவது
மணிநா வோசை கேட்டது மிலனே
யடிதொழு திறைஞ்சா மன்ன ரல்லது
குடிபழி தூற்றுங் கோலனு மல்ல
னின்னுங் கேட்டி நன்னுதன் மடந்தை
மடங்கெழு நோக்கின் *மதமுகந் திறப்புண்
டிடங்கழி நெஞ்சத் திளமை யானை
கல்விப் †பாகன் கையகப் படாஅ
தொல்கா ‡வுள்ளத் தோடு மாயினு
மொழுக்கொடு புணர்ந்தவில் விழுக்குடிப் பிறந்தோர்க்
கிழுக்கந் தாரா திதுவுங் கேட்டி
யுதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
புதவக் கதவம் §புடைத்தன னொருநா
ளரச வேலி யல்லது யாவதும்
புரைதீர் வேலி யில்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீ ரவ்வழி
யின்றவ் வேலி காவா தோவெனச்
செவிச்சூட் டாணியிற் புகையழல் பொத்தி
நெஞ்சஞ் சுடுதலி னஞ்சிநடுக் குற்று
வச்சிரத் தடக்கை யமரர் கோமா
னுச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத்தகை
குறைத்த செங்கோற் குறையாக் கொற்றத்
திறைகுடிப் பிறந்தோர்க் கிழுக்க மின்மை
யின்னுங் கேட்டி நன்வா யாகுதல்
||பெருஞ்சோறு பயந்த திருந்துவேற் றடக்கைத்
திருநிலை பெற்ற பெருநா ளிருக்கை
யறனறி செங்கோன் மறநெறி நெடுவாட்
புறவுநிறை புக்கோன் கறவைமுறை செய்தோன்
பூம்புனற் பழனப் புகார்நகர் வேந்தன்

* மதிமுகமெனவும் பாடம். † பாகரென்றும் பாடம்.

‡ உள்ளமோடோயினுமென்றும் பாடம்.

§ புடைத்தனனெனவும் பாடம்.

|| பாண்டவரும் துரியோதனாதியரும் போர்புரிந்தகாலத்தில் அவர்சேனைக்குச் சோழருளொருவன் சோறிட்டானாதலின், 'பெருஞ்சோறு பயந்த திருந்துவேற் றடக்கை' என்றார்; இதனைப் புறப்பாட்டாலுணர்க.

றுங்கா விளையு ணன்னா டதனுள்
வலவைப் பார்ப்பான் பராசர னென்போன்
குலவுவேற் சேரன் கொடைத்திறங் கேட்டு
வண்டமிழ் *மறையோற்கு †வானுறை கொடுத்த
திண்டிறல் நெடுவேற் சேரலற் காண்கெனக்
காடு நாடு மூரும் போகி
நீடுநிலை மலயம் பிற்படச் சென்றாங்
கொன்றுபுரி கொள்கை யிருபிறப் பாளர்
முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி
ஐம்பெரு வேள்வியுஞ் செய்தொழி லோம்பு
மற்றொழி லந்தணர் பெறுமுறை வகுத்த
நாவலங் கொண்டு நண்ணா ரோட்டிப்
பார்ப்பன வாகை சூடி யேற்புற
நன்கலங் கொண்டு தன்பதிப் பெயர்வோன்
செங்கோற் றென்னன் றிருந்துதொழின் மறையவர்
தங்கா லொன்றிய தாரே யல்லூர்ப்
பாசிலை பொதுளிய போதிமன் றத்துத்
தண்டே குண்டிகை வெண்குடை காட்டம்
பண்டச் சிறுபொதி பாதக் காப்பொடு
களைந்தன னிருப்போன் காவல வெண்குடை
விளைந்துமுதிர் கொற்றத்து விறலோன் வாழி
கடற்கடம் பெறிந்த காவலன் வாழி
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் வாழி
பூந்தண் பொருநைப் பொறையன் வாழி
மாந்த ரஞ்சேரன் மன்னவன் வாழ்கெனக்
குழலுங் குடுமியு மழலைச் செவ்வாய்த்
தளர்நடை யாயத்துத் தமர்முத னீங்கி

* மறையோனென்றது பாலைக்கௌதமனார்; இவருக்குச் சுவர்க்கங்கொடுத்த சேரன் இமயவரம்பன்றம்பி பல்யானைச் செல்புகழ்க்குட்டுவனென்பவன்; இதனைப் பதிற்றுப்பத்தின் மூன்றும்பத்திறுதியிலுள்ளதாகிய அடியில்வரும் வாக்கியத்தாலுணர்க: 'பல்யானைச்செல்புகழ்க்குட்டுவனைப் பாலைக்கௌதமனார்பாடினார் பத்துப்பாட்டு... பாடிப் பெற்றபரிசில், நீர்வேண்டியது கொண்மினென யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம்புகல்வேண்டுமெனப் பார்ப்பாரிற்பெரியோரைக் கேட்டு ஒன்பதுபெருவேள்வி வேட்பித்துப் பத்தாம்பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையுங் காணாராயினர்.' இச்சரிதை, பழமொழி ௩௧௬ - ம் பாட்டிலுங் கூறப்பட்டுள்ளது.

† வானகங்கொடுத்தவென்றும் பாடம்.

விளையாடு சிறாஅ ரொல்லாஞ் சூழ்தரக்
*குண்டப் பார்ப்பீ ரென்னொடு போதியென்
பண்டச் சிறுபொதி கொண்டுபோ மின்னெனச்
சீர்த்தகு சிறப்பின் வார்த்திகன் புதல்வ
†னாலமர் செல்வன் பெயர்கொண்டு வளர்ந்தோன்
பாலூறு செவ்வாய்ப் ‡படியோர் முன்னர்த்
தளர்நா வாயினு மறைவிளி வழாஅ
துளமலி யுவகையோ டொப்ப வோதத்
§தக்கிணன் றன்னை யிக்கோன் வியந்து
முத்தப் பூணூ லத்தகு புனைகலங்
கடகந் தோட்டொடு கையுறை யீத்துத்
தன்பதிப் பெயர்ந்தன னாக நன்கலன்
புனைபவும் பூண்பவும் பொறாஅ ராகி
வார்த்திகன் றன்னைக் காத்தன ரோம்பிக்
கோத்தொழி லிளையவர் கோமுறை யன்றிப்
படுபொருள் வௌவிய பார்ப்பா னிவனென
விடுசிறை கோட்டத் திட்டன ராக
வார்த்திகன் மனைவி கார்த்திகை யென்போ
ளலந்தன ளேங்கி யழுதன ணிலத்திற்
புரண்டனள் புலந்தனள் பொங்கின ளதுகண்டு
மையறு சிறப்பி னையை கோயிற்
செய்வினைக் கதவந் திறவா தாகலிற்
றிறவா தடைத்த திண்ணிலைக் கதவை
மறவேன் மன்னவன் கேட்டனன் மயங்கிக்
கொடுங்கோ லுண்டுகொல் கொற்றவைக் குற்ற
விடும்பை யாவது மறிந்தீ மின்னென
வேவ லிளையவர் காவலற் றொழுது
வார்த்திகற் றொடர்ந்த வாய்மொழி யுரைப்ப
நீர்த்தன் றிதுவென நெடுமொழி கூறி
யறியா மாக்களின் முறைநிலை திரிந்தவென்
னிறைமுறை பிழைத்தது பொறுத்தனுங் கடனெனத்
தடம்புனற் கழனித் தங்கா றன்னுடன்

* குண்டைப்பார்ப்பீரென்றும்பாடம்.
† ஆலமர்செல்வன்பெயர் - தக்ஷிணாமூர்த்தியென்பது.
‡ படியோர் - படிமத்தையுடையோர்=பிரமசாரிகள்.
§ தக்கனென்றும் பாடம்.

மடங்கா விளையுள் வயலூர் நல்கிக்
கார்த்திகை கணவன் வார்த்திகன் முன்ன
ரிருநில மடந்தைக்குத் திருமார்பு நல்கியவ
டணியா வேட்கையுஞ் சிறிதுதணித் தனனே
நிலைகெழு கூட லீரொடு மறுகின்
மலைபுரை மாட மெங்கணுங் கேட்பக்
கலையமர் செல்வி கதவந் திறந்தது
சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங்
கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மி
னிடுபொரு ளாயினும் படுபொரு ளாயினு
முற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென
யானை யெருத்தத் தணிமுர சிரீஇக்
கோமுறை யறைந்த கொற்ற வேந்தன்
முன்முறை பிழைத்த தகுதியுங் கேணீ
யாடித் திங்கட் பேரிருட் பக்கத்
தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ணா
வுரைசான் மதுரையோ டரசுகே டுறுமெனு
முரையு முண்டே நிரைதொடி யோயே
கடிபொழி லுடுத்த கலிங்கநன் னாட்டு
வடிவேற் றடக்கை வசுவுங் குமரனுந்
தீம்புனற் பழனச் சிங்க புரத்தினுங்
காம்பெழு கானக் கபில புரத்தினு
*மரசாள் செல்வத்து நிரைதார் வேந்தர்
வீயாத் திருவின் விழுக்குடிப் பிறந்த
தாய வேந்தர் தம்முட் பகையுற
விருமுக் காவதத் திடைநிலத் தியாங்கணுஞ்
செருவெல் வென்றியிற் செல்வோ ரின்மையி
னரும்பொருள் வேட்கையிற் பெருங்கலன் சுமந்து
கரந்துறை மாக்களிற் காதலி தன்னொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தினோ
ரங்கா டிப்பட் டருங்கலன் பகருஞ்
சங்கம னென்னும் வாணிகன் றன்னை
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவன்
வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன்

* உரைசால்செல்வத்தென்றும்பாடம்.

பரத னென்னும் பெயரனக் கோவலன்
விரத நீங்கிய வெறுப்பின னாதலி
னொற்ற னிவனெனப் பற்றினன் கொண்டு
வெற்றிவேன் மன்னற்குக் காட்டிக் கொல்வுழீஇக்
கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி
நிலைக்களங் காணா ணீலி யென்போ
ளரசர் முறையோ பரதர் முறையோ
வூரீர் முறையோ சேரியீர் முறையோவென
மன்றினு மறுகினுஞ் சென்றனள் பூசலிட்
டெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்தி
மலைத்தலை யேறியோர் மால்விசும் பேணியிற்
கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோ
ளெம்முறு துயரஞ் செய்தோ ரியாவதுந்
தம்முறு துயரமிற் றாகுக வென்றே
விழுவோ ளிட்ட வழுவில் *சாபம்
பட்டனி ராதலிற் கட்டுரை கேணீ
யும்மை வினைவந் துருத்த காலைச்
செம்மையி லோர்க்குச் செய்தவ முதவாது
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை

* இச்சாபவரலாற்றை இப்படியே மணிமேகலையில் உசு-வது வஞ்சிமாநகர் புக்ககாதையிலும் மணிமேகலைக்குக் கண்ணகி கூறியதாகக் கூறினர். அதுவருமாறு :—"வேட்கை துரப்பக் கோட்டம் புக்கு, வணங்கி நின்று குணம்பல வேத்தி, யற்புக்கட னில்லாது நற்றவம் படராது, கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த, தருளல் வேண்டுமென் றழுதன ளிரப்ப,வொருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போ, ளெம்மிறைக் குற்ற விடுக்கண் பொறாது,வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாண்,மதுரா பதியெனு மாபெருந் தெய்வ, மிதுநீர் முன்செய் வினையின் பயனாற், காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத், தாய மன்னவர் வசுவுங் குமரனுஞ், சிங்க புரமுஞ் செழுநீர்க் கபிலையு, மங்காள் கின்றோ ரடற்செரு வுறுநாண், மூவிரு காவத முன்னுந ரின்றி, யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டுப், பல்கலங் கொண்டு பலரறி யாமல, லெல்வளை யாளோ டரிபுர மெய்திப், பண்டக் கலம்பகர் சங்கமன் றன்னைக், கண்டனர் கூறத் தையனின் கணவனப், பார்த்திபன் றொழில்செயும் பரத னென்னுந், தீத்தொழி லாளன் றெற்றெனப் பற்றி, யொற்ற னிவனென வுரைத்துமன் னற்குக், குற்றமி லோனைக் கொலைபுரிந் திட்டன, னாங்கவன் மனைவி யழுதன ளரற்றி, யேங்கிமெய் பெயர்ப்போ ளிறுவரை யேறி, யிட்ட சாபங் கட்டிய தாகு, மும்மைவினை யுருத்த லொழியா தென்னு, மெய்ம்மைக் கிளவி விளம்பிய பின்னுஞ், சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தேன்"

யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி னல்ல
தீனோர் வடிவிற் காண்ட லில்லென
மதுரைமா தெய்வ மாபத் தினிக்கு
விதிமுறை சொல்லி யழல்வீடு கொண்டபின்
கருத்துறு கணவற் கண்டபி னல்ல
திருத்தலு மில்லை *னிற்றலு மிலனெனக்
கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்துக்
கீழ்த்திசை வாயிற் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கென
விரவும் பகலு மயங்கினள் கையற்
றுரவுநீர் வையை யொருகரைக் கொண்டாங்
கவல வென்னா ளவலித் திழிதலின்
மிசைய வென்னாண் மிசைவைத் தேறலிற்
கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு பிளந்தாங்
கவுணரைக் கடந்த சுடரிலை நெடுவே
னெடுவேள் குன்ற மடிவைத் தேறிப்
பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழோர்
தீத்தொழி லாட்டியேன் யானென் றேங்கி
யெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்திப்
பீடுகெழு நங்கை பெரும்பெய ரேத்தி
வாடா மாமலர் மாரி பெய்தாங்
கமரர்க் கரசன் றமர்வந் தேத்தக்
கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு
வான வூர்தி யேறினண் மாதோ
கானமர் புரிகுழற் கண்ணகி தானென

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை திண்ணமாற் - றெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.

கட்டுரைகாதை முற்றிற்று.

---

இறத்தலுமிலனென்றும் பாடம்.

முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தம்
வையைப் பேரியாறு வளஞ்சுரந் தூட்டலும்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலு
மாரபடி சாத்துவதி யென்றிரு விருத்தியு
நேரத் தோன்றும் வரியுங் குரவையு
மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் தனிக்கோ ணிலைமையும்
வடவாரியர் படைகடந்து
தென்றமிழ்நா டொருங்குகாணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
னரசு கட்டிலிற் றுஞ்சிய பாண்டிய
னெடுஞ்செழியனோ டொருபரிசா
நோக்கிக் கிடந்த
மதுரைக் காண்ட முற்றிற்று.

## மதுரைக்காண்டம் முற்றிற்று.

மூன்றாவது

# வஞ்சிக்காண்டம்.

---

## உச. குன்றக்குரவை.

உரைப்பாட்டுமடை

குருவியோப்பியுங் கிளிகடிந்துங் குன்றத்துச் சென்றுவைகி
யருவியாடியுஞ் சுனைகுடைந்து மலவுற்று வருவேமுன்
மலைவேங்கை நறுநிழலின் வள்ளிபோல்வீர் மனநடுங்க
முலையிழந்து வந்துநின்றீர் யாவிரோவென முனியாதே
மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந் துருத்தகாலைக்
கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன் யானென்றா
ளென்றலு மிறைஞ்சியஞ்சி யிணைவளைக்கை யெதிர்கூப்பி
நின்றவெல்லையுள் வானவரு நெடுமாரி மலர்பொழிந்து
குன்றவருங் கண்டுநிற்பக் கொழுநனொடு கொண்டுபோயினா
ரிவள்போலு நங்குலத்துக்கோ ரிருந்தெய்வ மில்லையாதலிற்
*சிறுகுடியீரோ சிறுகுடியீரோ தெய்வங்கொள்ளுமின் சிறுகுடியீரோ
நிறங்கிள ரருவிப் பறம்பிற் றாழ்வரை
நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரோ
தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்
குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்
பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின்
பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமி
னொருமுலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே

கொளுச்சொல்

ஆங்கொன்று காணா யணியிழா யீங்கிதுகா
ணஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியற

*சிறுகுடீஇரேயென்றும்பாடம்.

சிந்துரச சுண்ணஞ் செறியத்தூய்த் தேங்கமழ்ந்
திந்திர வில்லி னெழில்கொண் டிழுமென்று
வந்திங் கிழியு மலையருவி யாடுதுமே
யாடுதுமே தோழி யாடுதுமே தோழி
யஞ்சலோம் பென்று நலனுண்டு நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி யாடுதுமே

இவைமூன்றும் சிறைப்புறம் ;
தோழிக்குத் தலைவிசொல்லியது.

எற்றொன்றுங் காணேம் புலத்த லவர்மலைக
கற்றீண்டி வந்த புதுப்புனல்
கற்றீண்டி வந்த புதுப்புனன் மற்றையா
ருற்றாடி னோந்தோழி நெஞ்சன்றே

என்னொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
பொன்னாடி வந்த புதுபபுனல்
பொன்னாடி வந்த புதுபபுனன் மற்றையார்
முன்னாடி னோந்தோழி நெஞ்சன்றே

யாதொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
போதாடி வந்த புதுப்புனல்
போதாடி வந்த புதுப்புனன் மற்றையார்
மீதாடி னோந்தோழி நெஞ்சன்றே

பாட்டுமடை

உரையினி மாதரா யுண்கண் சிவப்பப்
புரைதீர் புனல்குடைந் தாடினோ மாயி
னுரவுநீர் மாகொன்ற வேலேத்தி யேத்திக
குரவை தொடுத்தொன்று பாடுகம்வா தோழி

சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று
மேரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே

அணிமுகங்க ளோராறு மீராறு கையு
மிணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ண
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே

சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
திருமுலைப்பா லுண்டான் றிருக்கைவே லன்றே
வருதிகிரி யோனவுணன் மார்பம் பிளந்து
குருகுபெயர்க் குன்றங் கொன்ற நெடுவேலே

பாட்டுமடை

இறைவளை நல்லா யிதுநகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்கக
வறியாண்மற் றன்னை யலர்கடம்ப னென்றே
வெறியாட லுன்விரும்பி வேலன்வரு கென்றாள்

ஆய்வளை நல்லா யிதுநகையா கின்றே
மாமலை வெற்பனோய் தீர்க்கவரும் வேலன்
வருமாயின் வேலன் மடவ னவனிற்
குருகு பெயர்க்குன்றங் கொன்றான் மடவன்

செறிவளைக்கை நல்லா யிதுநகையா கின்றே
வெறிகமழ வெற்பனோய் தீர்க்கவரும் வேலன்
வேலன் மடவ னவனினுந் தான்மடவ
னாலமர் செலவன் புதல்வன் வருமாயின்

நேரிழை நல்லாய் நகையா மலைநாடன்
மார்புதரு வெந்நோய் தீர்க்கவரும் வேலன்
தீர்க்கவரும் வேலன் றன்னினுந் தான்மடவன்
கார்க்கடப்பந் தாரெங் கடவுள் வருமாயின்

பாட்டுமடை

வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து
நீலப் பறவைமே னேரிழை தன்னோடு
மாலமர் செல்வன் புதல்வன் வரும்வந்தான்
மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே

கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதன்
மயிலியன் மடவரன் மலையர்தம் மகளார்
செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
மயன்மண மொழியருள் பலர்மண மெனவே

மலைமகண் மகனைநின் மதிநுதன் மடவரல
குலமலை யுறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுணின் னிணையடி தொழுதேம்
பலர்றி மணமவர் படுகுவ ரெனவே

குறமக ளவளெம குலமக ளவளொடு
மறுமுக வொருவநின் னடியிணை தொழுதேந்
துறைமிசை நினதிரு திருவடி தொழுநர்
பெறுகநன் மணம்விடு பிழைமண மெனவே.

பாட்டுமடை

என்றியாம் பாட மறைநின்று கேட்டருளி
மன்றலங் கண்ணி மலைநாடன் போவான்முன்
சென்றே னவன்றன திருவடி கைதொழுது
நின்றே னுரைத்தது கேள்வாழி தோழி

ஒரு சா: உ.சிலை கடம்பு சூடி யுடம்பிடி யேந்தி
மடந்தை பொருட்டால வருவ திவ்வூ
ரறுமுக மில்லை யணிமயி லில்லைக்
குறமக ளில்லைச் செறிதோ ளில்லைக்
கடம்பூண் டெய்வ மாக நேரார்
மடவர் மன்றவிச் சிறுகுடி யோரே

என்றீங்
கலர்பாடு பெற்றமை யானுரைப்பக் கேட்டுப்
புலர்வாடு நெஞ்சம் புறங்கொடுத்துப் போன
மலாதலை வெறபன் வரைவானும் போலு
முலையினுன் மாமதுரை கோவிழைத்தாள் காதற்
றலைவனை வானோர் தமராகக் கூடிப்
பலர்தொழு பத்தினிக்குக் காட்டிக் கொடுத்த
நிலையொன்று பாடுதும யாம்

பாடுகம்வா வாழி தோழியாம் பாடுகம்
பாடுகம்வா வாழி தோழியாம் பாடுகங்
கோமுறை நீங்கக கொடிமாடக் கூடலைத
தீமுறை செய்தாளை யேத்தியாம பாடுக
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுகான்
மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே

பாடுற்றுப்
பதநினிப் பெண்டிர் பரவித் தொழுவாளோர்
பைதர வல்குனம் பைம்புனத் துள்ளாளே
பைத்தர வல்குல் கணவனை வானோர்க
ளுய்த்துக் கொடுத்து முனையோ வொழியாரோ

வானக வாழ்க்கை யமரர் தொழுதேத்தக்
கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை மறுதரவோ வில்லாளே

மறுதர வில்லாளை யேத்திநாம் பாடப்
பெறுகதில் லம்ம விவ்வூரு மோர்பெற்றி
பெற்றி யுடையதே பெற்றி யுடையதே
பொற்றொடி மாதர் கணவன் மணங்காணப்
பெற்றி யுடையதிவ் வூர்

என்றியாங்
கொண்டு நிலைபாடி யாடுங் குரவையைக்
கண்டுநங் காதலர் கைவந்தா ரானா
துண்டு மகிழ்ந்தானா வைகலும் வாழியர்
வில்லெழுதிய விமயத்தொடு
கொல்லி யாண்ட குடவர் கோவே.

குன்றக்குரவை முற்றிற்று.

# இருபத்தைந்தாவது
# காட்சிக்காதை.

---:o:---

மாநீர் வேலிக் கடம்பெறிந் திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்
திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளித்
துஞ்சா முழவி னருவி யொலிக்கு
மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப்
பைந்தொடி யாயமொடு பரந்தொருங் கீண்டி
வஞ்சி முற்ற நீங்கிச் செல்வோன்
வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்
பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பு
மிலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவு
மரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி
யொருநூற்று நாற்பதி யோசனை விரிந்த
பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று
கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகந் திலக நறுங்கா ழார
முதிர்பூம் பரப்பி னொழுகுபுன லொளித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் பாட
நெடியோன் மார்பி லாரம் போன்று
பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை
யிடுமண லெக்க ரியைந்தொருங் கிருப்பக்
குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியுந்
தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியு
நறவுக்கண் ணுடைத்த குறவ ரோதையும்
பறையிசை யருவிப் பயங்கெழு மோதையும்
புலியொடு பொரூஉம் புகர்முக வோதையுங்
கலிகெழு மீமிசைச் சேணோ ரோதையும்

பயம்பில்வீழ் யானைப் பாக ரோதையு
மியங்குபடை யரவமோ டியாங்கணு மொலிப்ப
வளந்துகடை யறியா வருங்கலஞ் சுமந்து
வளந்தலை மயங்கிய வஞ்சி முற்றத்
திறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறைசுமந்து நிற்குந் தெவ்வர் போல
யானைவெண் கோடு மகிலின் குப்பையு
மான்மயிர்க் கவரியு மதுவின் குடங்களுஞ்
சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியு
மஞ்சனத் திரளு மணியரி தாரமு
மேல வல்லியு மிருங்கறி வல்லியுங்
கூவை நீறுங் கொழுங்கொடிக் கவலையுந்
தெங்கின் பழனுந் தேமாங் கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களுங்
காயமுங் கரும்பும் பூமலி கொடியுங்
கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையி னிருங்கனித் தாறு
மாளியி னணங்கு மரியின் குருளையும
வாள்வரிப் பறழு மதகரிக் களபமுங்
குரங்கின் குட்டியுங் குடாவடி யுளியமும்
வரையாடு வருடையு மடமான் மறியுங்
காசறைக் கருவு மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையு நாவியின் பிள்ளையுங்
கானக் கோழியுந் தேமொழிக் கிள்ளையு
மலைமிசை மாக்க டலைமிசைக் கொண்டாங்
கேழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றங்.
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றன
ளெந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்க ளினைப்பினு மறியேம்
பன்னா ளாயிரத் தாண்டுவா ழியரென
மண்களி நெடுவேன் மன்னவற் கண்டு
கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த
தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கு

மொண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாந்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்
தீவினைச் சிலம்பு காரண மாக
வாய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்குஞ்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
யஞ்சி லோதி யறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டது
மரிமா னேந்திய வமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
றயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்
கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற்
பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்
கொற்ற வேந்தன் கொடுங்கோற் றன்மை
யிற்றெனக் காட்டி யிறைக்குரைப் பனள்போற்
றன்னாட் டாங்கட் டனிமையிற் செல்லா
ணின்னாட் டகவயி னடைந்தன ணங்கையென்
றொழிவின் றுரைத்தீண் டூழி யூழி
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றமெனத்
தென்னர் கோமான் றீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தின னுரைப்போ
னெம்மோ ரன்ன வேந்தர்க் கிற்றெனச்
செம்மையி னிகந்தசொற் செவிப்புலம் படாமு
னுயிர்பதிப் பெயர்ந்தமை யுறுக வீங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது
மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சங்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி

மன்பதை காக்கு நன்குடிப் பிறத்த
றுன்ப மல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பந் துணிந்துவந் துரைத்த
நன்னூற் புலவற்கு நன்கன முரைத்தாங்
குயிருடன் சென்ற வொருமகன் றன்னினுஞ்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினு
நன்னுதல் வியக்கு நலத்தோ ரியாரென
மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி
காதலன் றுன்பங் காணாது கழிந்த
மாதரோ பெருந்திரு வுறுக வானகத்
தத்திற நிற்கநம் மகனா டடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென
மாலை வெண்குடை மன்னவன் விரும்பி
நூலறி புலவரை நோக்க வாங்கவர்
ஒற்கா மரபிற் பொதியி லன்றியும்
விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்துக்
கற்கால் கொள்ளினுங் கடவு ளாகுங்
கங்கைப்பேர் யாற்றினுங் காவிரிப் புனலினுந்
தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப்
பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தன்
மறத்தகை நெடுவா ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉஞ் செயற்கையோ வன்று
புன்மயிர்ச் சடைமுடிப் புலரா வுடுக்கை
முந்நூன் மார்பின் முத்தீச் செல்வத்
திருபிறப் பாளரொடு பெருமலை யரசன்
மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்
கடவு ளெழுதவோர் கற்றா ராயினின்
வழிநின்று பயவா மாண்பில் வாழ்க்கை
கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியு
முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை
மதிமுடிக் களித்த மகட்பாற் காஞ்சியுந்
தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியு
நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி
யலர்மந் தாரமோ டாங்கவண் மலர்ந்த

வேங்கையொடு தொடுத்த விளங்குவிறன் மாலை
மேம்பட மலைதலுங் காண்குவ மீங்கெனக்
கொடைநிலை வஞ்சியுங் கொற்ற வஞ்சியு
நெடுமா ராய நிலைஇய வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன்பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பிற் பெருஞ்சோற்று வஞ்சியுங்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
வட்கார் போகிய வான்பனந் தோட்டுடன்
புட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாண் மலைந்த வஞ்சிசூடு துறையெனப்
பல்யாண்டு வாழ்கநின் கொற்ற மீங்கென
வில்லவன் கோதை வேந்தற் குரைக்கு
நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக
கொங்கர்செங் களத்துக் கொடுவரிக் கயற்கொடி
பகைப்புறத்துத் தந்தன ராயினு மாங்கவை
திசைமுக வேழத்தின் செவியகம் புக்கன
கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்
வடவா ரியரொடு வண்டமிழ மயக்கத்துன்
கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது
கங்கைப் பேர்யாற்றுக் கடும்புன னீந்த
மெங்கோ மகளை யாட்டிய வந்நா
ளாரிய மன்ன ரீரைஞ் ஞூற்றுவர்க்
கொருநீ யாகிய செருவெங் கோலங்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்ற
மிமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
விதுநீ கருதினை யாயி னேற்பவர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
யிமய மால்வரைக் கெங்கோன் செலவது
கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்
வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாந்
தென்றமிழ் நன்னாட்டுச செழுவிற் கயற்புலி
மண்டலை யேற்ற வரைக வீங்கென
நாவலந் தண்பொழின் மன்ன ரொற்றுநங்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா

வம்பணி யானை வேந்த ரொற்றே
தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றோ
வறைபறை யென்றே யழும்பில்வே ளுரைப்ப
நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து
கூடார் வஞ்சிக் கூட்டுண்டு சிறந்த
வாடா வஞ்சி மாநகர் புக்கபின்
வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதோ றூழி யுலகங் காக்கென
விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு பெயருமெங் காவல னாதலின்
வடதிசை மருங்கின் மன்ன ரெல்லா
மிடுதிறை கொடுவந் தெதிரீ ராயிற
கடற்கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையுங்
கேட்டு வாழுமின் கேளீ ராயிற்
றோட்டுணை துறக்குந் துறவொடு வாழுமின்
றாழ்கழன் மன்னன் றன்றிரு மேனி
வாழ்க சேனா முகமென வாழ்த்தி
யிறையிகல் யானை யெருத்தத் தேற்றி
யறைபறை யெழுந்ததா லணிநகர் மருங்கென.

காட்சிக்காதை முற்றிற்று.

## இருபத்தாறாவது

# கால்கோட்காதை.



அறைபறை யெழுந்தபி னரிமா னேந்திய
முறைமுதற் கட்டி லிறைமக னேற
வாசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ
மன்னர் மன்னன் வாழ்கென் றேத்தி
முன்னிய திசையின் முறைமொழி கேட்ப
வியம்படு தானை விறலோர்க் கெல்லா
முயர்ந்தோங்கு வெண்குடை யுரவோன் கூறு
மிமயத் தாபத ரெமக்கீங் குணர்த்திய
வமையா வாழ்க்கை யரசர் வாய்மொழி
நம்பா லொழிகுவ தாயி னாங்கஃ
தெம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்
குடிநடுக் குறூஉங் கோலே னாகென
வார்புனை தெரியலு மலர்தார் வேம்புஞ்
சீர்கெழு மணிமுடிக் கணிந்தோ ரல்லா
லஞ்சினர்க் களிக்கு மடுபோ ரண்ணனின்
வஞ்சினத் தெதிரு மன்னரு முளரோ
விமய வரம்பநின் னிகழ்ந்தோ ரல்ல
ரமைகநின் சினமென வாசான் கூற
வாறிரு மதியினுங் காருக வடிப்பயின்
றைந்து கேள்வியு மமைந்தோ னெழுந்து
வெந்திறல் வேந்தே வாழ்கநின் கொற்ற
மிருநில மருங்கின் மன்னரெல் லாநின்
றிருமலர்த் தாமரைச் சேவடி பணியு

முழுத்த மீங்கிது முன்னிய திசைமே
லெழுச்சிப் பாலை யேகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
வாளுங் குடையும் வடதிசைப் பெயர்க்கென
வுரவுமண் சுமந்த வரவுத்தலை பனிப்பப்
பொருந ரார்ப்பொடு முரசெழுந் தொலிப்ப
விரவிடங் கெடுத்த நிரைமணி விளக்கின்
விரவுக்கொடி யடுக்கத்து நிரயத் தானையோ
டைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
வெம்பரி யானை வேந்தற் கோங்கிய
கரும வினைஞருங் கணக்கியல் வினைஞருந்
தரும வினைஞருந் தந்திர வினைஞரு
மண்டிணி ஞால மாள்வோன் வாழ்கெனப்
பிண்ட முண்ணும் பெருங்களிற் றெருத்தின்
மறமிகு வாளு மாலைவெண் குடையும்
புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்
புரைதீர் வஞ்சி போந்தையிற் றொடுப்போ
னரசுவிளங் கவைய முறையிற் புகுதர
வரும்படைத் தானை யமர்வேட்டுக் கலித்த
பெரும்படைத் தலைவர்க்குப் பெருஞ்சோறு வகுத்துப்
பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து
ஞாலங் காவலர் நாட்டிறை பயிருங்
காலை முரசங் கடைமுகத் தெழுதலு
நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
யுலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந்
திறைஞ்சாச சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
மறையோ ராக்கிய வாவுதி நறும்புகை
நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
வாடக மாடத் தறிதுயி லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் றேத்தத்
தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்

னாங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
நாடக மடந்தைய ராடரங் கியாங்கணுங்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே
வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோ
டோடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
மாகதப் புலவரும் வேதா ளிகருஞ்
சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த
யானை வீரரு மிவுளித் தலைவரும
வாய்வாண் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும
வானவன் போல வஞ்சி நீங்கித்
தண்டத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட
வுலக மன்னவ னொருங்குடன் சென்றாங்
காலும் புரவி யணித்தேர்த் தானையொடு
நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்
காடியல் யானையுந் தேரு மாவும
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற
பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்ற
னிருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்
கருந்திறன் மாக்க ளடியீ டேத்தப்
பெரும்பே ரமளி யேறிய பின்ன
ரியங்குபடை யரவத் தீண்டொலி யிசைப்ப
விசும்பியங்கு முனிவர் வியன்நில மாளு
மிந்திர திருவனைக் காண்குது மென்றே
யந்தரத் திழிந்தாங் கரசுவிளங் கவையத்து
மின்னொளி மயக்கு மேனியொடு தோன்ற
மன்னவ னெழுந்து வணங்கிநின் றோனைச்
செஞ்சடை வானவ னருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்
மலையத் தேகுதும் வான்பே ரிமய
நிலையத் தேகுத னின்கருத் தாதலி

ணருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர்
பெருநில மன்ன காத்தனின் கடனென்
றாங்கவர் வாழ்த்திப் பெயர்ந்ததற் பின்னர்
வீங்குநீர் ஞால மாள்வோன் வாழ்கெனக்
கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடருந்
தங்குலக் கோதிய தகைசா லணியின
ரிருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி
மருள்படப் பரப்பிய வொலியன் மாலையர்
வடஞ்சுமந் தோங்கிய வளரிள வனமுலைக்
கருங்கய னெடுங்கட் காரிகை யாரோ
டிருங்குயி லால வினவண்டி யாழ்செய
வரும்பவிழ் வேனில் வந்தது வாரார்
காதல ரென்னு மேதகு சிறப்பின்
மாதர்ப் பாணி வரியொடு தோன்றக்
கோல்வளை மாதே கோலங் கொள்ளாய்
காலங் காணாய் கடிதிடித் துரறிக்
காரோ வந்தது காதல ரேறிய
தேரோ வந்தது செய்வினை முடித்தெனக்
காஅர்க் குரவையொடு கருங்கய னெடுங்கட்
கோற்றொடி மாதரொடு குடகர் தோன்றத்
தாழ்தரு கோலத்துத் தமரொடு சிறந்து
வாள்வினை முடித்து மறவாள் வேந்த
னூழி வாழியென் றோவர் தோன்றக்
கூத்துள் படுவோன் காட்டிய முறைமையி
னேத்தின ரறியா விருங்கல னல்கி
வேத்தினம் நடுக்கும் வேலோ னிருந்துழி
நாடக மகளி ரைம்பத் திருவருங்
கூடிசைக் குயிலுவ ரிருநூற் றெண்மருந்
தொண்ணூற் றறுவகைப் பாசண் டத்துறை
நண்ணிய நூற்றுவர் நகைவே ழம்பருங்
கொடுஞ்சி நெடுந்தே ரைம்பதிற் றிரட்டியுங்
கடுங்களி யானை யோரைஞ் ஞூறு
மையீ ராயிரங் கொய்யுளைப் புரவியு
மெய்யா வடவளத் திருபதி னாயிரங்
கண்ணெழுத் துப்படுத் தனகைபுனை சகடமுஞ்
சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற

கஞ்சுக முதல்வரீ ரைஞ்ஞூற் றுவருஞ்
சேயுயர் விற்கொடிச் செங்கோல் வேந்தே
வாயி லோரென வாயில்வந் திசைப்ப
நாடக மகளிரீ ரைம்பத் திருவருங்
கூடிசைக் குயிலுவக் கருவி யாளருஞ்
சஞ்சயன் றன்னொடு வருக வீங்கெனச்
செங்கோல் வேந்தன் றிருவிளங் கவையத்துச்
சஞ்சயன் புகுந்து தாழ்ந்துபல வேத்தி
யானையிற் புகுந்த வைம்பத் திருவரொடு
மாண்வினை யாளரை வகைபெறக் காட்டி
வேற்றுமை யின்றி நின்னொடு கலந்த
நூற்றுவர் கன்னருங் கோற்றொழில் வேந்தே
வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது
கடவு ளெழுதவோர் கற்கே யாயி
னோங்கிய விமயத்துக் கற்கால் கொண்டு
வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்தாங்
கியாந்தரு மாற்றல மென்றன ரென்று
வீங்குநீர் ஞால மாள்வோய் வாழ்கென
வடல்வேன் மன்ன ராருயி ருண்ணுங்
கடலந் தானைக் காவல னுரைக்கும்
பால குமரன் மகனண் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
யருந்தமி ழாற்ற லறிந்தில ராங்கெனச்
சீற்றங் கொண்டிச் சேனை செலவது
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன
வங்கப் பெருநிரை செய்க தாமெனச்
சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்க
ளெஞ்சா நாவின ரைஞ்ஞூற் றுவர்
சந்தின் குப்பையுந் தாழ்நீர் முத்துந்
தென்ன ரிட்ட திறையொடு கொணர்ந்து
கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
மண்ணுடை முடங்கலம் மன்னவர்க் களித்தாங்
காங்கவ ரேகிய பின்னர் மன்னிய
வீங்குநீர் ஞால மாள்வோ னோங்கிய

நாடாள் செல்வர் நல்வல னேத்தப்
பாடி யிருக்கை நீங்கிப் பெயர்ந்து
கங்கைப் பேர்யாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங் கெய்தி
யாங்கவ ரெதிர்கொள வந்நாடு கழிந்தாங்
கோங்குநீர் வேலி யுத்தர மரீஇப்
பகைப்புலம் புக்குப் பாசறை யிருந்த
தகைப்பருந் தானை மறவோன் றன்மு
னுத்தரன் விசித்திர னுருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் றனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாந்
தென்றமி ழாற்றல் காண்குது மியாமெனக்
கலந்த கேண்மையிற் கனக விசயர்
நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர
விரைதேர் வேட்டத் தெழுந்த வரிமா
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேன் மன்னர்
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
வெயிற்கதிர் விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்
வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயி
ரிடிக்குரன் முரச மிழுமென் பாண்டி
லுயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசமொடு மாதிர மதிரச்
சிலைத்தோ ளாடவர் செருவேற் றடக்கையர்
கறைத்தோன் மறவர் கடுந்தே ரூருநர்
வெண்கோட் டியானையர் விரைபரிக் குதிரையர்
மண்கண் கெடுத்தவிம் மாநிலப் பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
விளங்குகொடி நந்தின் வீங்கிசை நாவு
நடுங்குதொழி லொழிந்தாங் கொடுங்கியுள் செறியத்
தாருந் தாருந் தாமிடை மயங்கத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோண் மறவ ருடற்பொறை யடுக்கத்
தெறிபிண மிடறிய குறையுடற் கவந்தம்
பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்
பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்

கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட
வடுந்தேர்த் தானை யாரிய வரசர்
கடும்படை மாக்களைக் கொன்று களங்குவித்து
நெடுந்தேர்க் கொடிஞ்சியுங் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட
வெருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை
யொருபக லெல்லையி னுண்ணு மென்ப
தாரிய வரச ரமர்க்களத் தழிய
நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
யோங்கிருஞ் சென்னி மேம்பட மலைய
வாய்வா ளாண்மையின் வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசயனு
மைம்பத் திருவர் கடுந்தே ராளரொடு
செங்குட் டுவன்றன் சினவலைப் படுதலுஞ்
சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர்
பிடிகைப் பீலிப் பெருநோன் பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளின
ராடு கூத்த ராகி யெங்கணு
மேந்துவா ளொழியத் தாந்துறை போகிய
விச்சைக் கோலத்து வேண்டுவயிற் படர்தரக்
கச்சை யானைக் காவலர் நடுங்கக்
கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
வாளழி வாங்கி யதரி திரித்த
வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தித்
தொடியுடை நெடுங்கை தூங்கத் தூக்கி
முடியுடைக் கருந்தலை முந்துற வேந்திக்
கடல்வயிறு கலக்கிய ஞாட்புங் கடலக
ழிலங்கையி லெழுந்த சமரமுங் கடல்வணன்
றேரூர் செருவும் பாடிப் பேரிசை
முன்றேர்க் குரவை முதல்வனை வாழ்த்திப
பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை
முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித்
தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு
மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்டச்
சிறப்பூண் கடியினஞ் செங்கோற் கொற்றத்

தறக்களஞ் செய்தோ னூழி வாழ்கென
மறக்கள முடித்த வாய்வாட் குட்டுவன்
வடதிசை மருங்கின் மறைகாத் தோம்பினர்
தடவுத்தீ யவியாத் தண்பெரு வாழ்க்கைக்
காற்றா தாளரைப் போற்றிக் காமினென
வில்லவன் கோதையொடு வென்றுவினை முடித்த
பல்வேற் றானைப் படைபல வேவிப்
பொற்கோட் டிமயத்துப் பொதுவறு பத்தினிக்
கற்கால் கொண்டனன் காவல னங்கென.

கால்கோட்காதை முற்றிற்று.

## இருபத்தேழாவது

# நீர்ப்படைக்காதை.

வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடி யேற்றிச்
செறிகழல் வேந்தன் றென்றமி ழாற்ற
லறியாது மலைந்த வாரிய மன்னரைச்
செயிர்த்தொழின் முதியோன் செய்தொழில் பெருக
வுயிர்த்தொகை யுண்ட வொன்பதிற் றிரட்டியென்
றியாண்டு மதியு நாளுங் கடிகையு
மீண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள
வருபெருந் தானை மறக்கள மருங்கி
னொருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட
செங்குட் டுவன்றன் சினவேற் றானையொடு
கங்கைப் பேரியாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நூற்றிறன் மாக்களி னீர்ப்படை செய்து
மன்பெருங் கோயிலு மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரு
முரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையுந்
திருமலர்ப் பொய்கையும் வரிகா ணரங்கமும்
பேரிசை மன்னர்க் கேற்பவை பிறவு
மாரிய மன்ன ரழகுற வமைத்த
தெள்ளுநீர்க் கங்கைத் தென்கரை யாங்கண்
வெள்ளிடைப் பாடி வேந்தன் புக்கு
நீணில மன்னர் நெஞ்சுபுக லழித்து
வானவ மகளிரின் வதுவைசூ டயர்ந்தோ
ருலையா வெஞ்சம மூர்ந்தம ருழக்கித்
தலையுந் தோளும் விலைபெறக் கிடந்தோர்
நாள்விலைக் கிளையு ணல்லம ருழுவத்து

வாள்வினை முடித்து மறத்தொடு முடிந்தோர்
குழிகட் பேய்மகள் குரவையிற் றொடுத்து
வழிமருங் கேத்த வாளொடு மடிந்தோர்
கிளைக டம்மொடு கிளர்பூ ணாகத்து
வளையோர் மடிய மடிந்தோர் மைந்தர்
மலைத்துத் தலைவந்தோர் வாளொடு மடியத்
தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்
திண்டேர்க் கொடுஞ்சியொடு தேரோர் வீழப்
புண்டோய் குருதியிற் பொலிந்த மைந்தர்
மாற்றருஞ் சிறப்பின் மணிமுடிக் கருந்தலைக்
கூற்றுக் கண்ணோட வரிந்துகளங் கொண்டோர்
நிறஞ்சிதை கவயமொடு நிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வாண் மறவர்
வருக தாமென வாகைப் பொலந்தோடு
பெருநா ளமயம் பிறக்கிடக் கொடுத்துத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்துப்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்த
னாடுகொண் மார்போ டரசுவிளங் கிருக்கையின்
மாடல மறையோன் வந்து தோன்றி
வாழ்க வெங்கோ மாதவி மடந்தை
கானற் பாணி கனக விசயர்த
முடித்தலை நெரித்தது முதுநீர் ஞால
மடிப்படுத் தாண்ட வரசே வாழ்கெனப்
பகைப்புலத் தரசர் பலரீங் கறியா
நகைத்திறங் கூறினை நான்மறை யாளா
யாதுநீ கூறிய வுரைப்பொரு ளீங்கென
மாடல மறையோன் மன்னவற் குரைக்கும்
கானலந் தண்டுறைக் கடல்விளை யாட்டினுண்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோ
டூடற் காலத் தூழ்வினை யுருத்தெழக்
கூடாது பிரிந்து குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரைபுக் காங்
கிலைத்தார் வேந்த னெழில்வா னெய்தக்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
குடவர் கோவே நின்னாடு புகுந்து
வடதிசை மன்னர் மணிமுடி யேறின

ளின்னுங் கேட்டரு ளிகல்வேற் றடக்கை
மன்னர் கோவே யான்வருங் காரண
மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வே
னூழ்வினைப் பயன்கொ லுரைசால் சிறப்பின்
வாய்வாட் டென்னவன் மதுரையிற் சென்றேன்
வலம்படு தானை மன்னவன் றன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை யென்றலுந்
தாதெரு மன்றத்து மாதரி யெழுந்து
கோவலன் றீதிலன் கோமகன் பிழைத்தா
னடைக்கல மிழந்தே னிடைக்குல மாக்காள்
குடையுங் கோலும் பிழைத்த வோவென
விடையிரு ளியாமத் தெரியகம் புக்கதுந்
தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்ற
நிவந்தோங்கு செங்கோ னீணில வேந்தன்
போகுயிர் தாங்கப் பொறைசா லாட்டி
யென்னோ டிவர்வினை யுருத்த தோவென
வுண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ந்ததும்
பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்
குற்றது மெல்லா மொழியின் றுணர்ந்தாங்
கென்பதிப் பெயர்ந்தே னென்றுயர் போற்றிச
செம்பியன் மூதூர்ச் சிறந்தோர்க் குரைக்க
மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ்
செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி
மாபெருந் தானம் வான்பொரு ளீத்தாங்
கிந்திர விகார மேழுடன் புக்காங்
கந்தர சாரிக ளாறைம் பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவுந்
துறந்தோன் மனைவி மகன்றுயர் பொறாஅ
ளிறந்துய ரெய்தி யிரங்கிமெய் விடவுங்
கண்ணகி தாதை கடவுளர் கோலத்
தண்ணலம் பெருந்தவத் தாசீ வகர்முன்
புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவுந்
தானம் புரிந்தோன் றன்மனைக் கிழத்தி

நாள்வீடு நல்லுயிர் நீத்துமெய் விடவு
மற்றது கேட்டு மாதவி மடந்தை
நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
மணிமே கலையை வான்றுய ருறுக்குங்
கணிகையர் கோலங் காணா தொழிகெனக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவு
மென்வாய்க் கேட்டோ ரிறந்தோ ருண்மையி
னன்னீர்க் கங்கை யாடப் போந்தேன்
மன்னர் கோவே வாழ்க வீங்கெனத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்த
வாடா வஞ்சி வானவர் பெருந்தகை
மன்னவ னிறந்தபின் வளங்கெழு சிறப்பிற்
றென்னவ னாடு செய்ததீங் குரையென
நீடுவா ழியரோ நீணில வேந்தென்று
மாடல மறையோன் மன்னவற் குரைக்குநின்
மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
வொத்த பண்பின ரொன்பது மன்ன
ரிளவரசு பொறாஅ ரேவல் கேளார்
வளநா டழிக்கு மாண்பின ராதலி
*னொன்பது குடையு மொருபக லொழித்தவன்
பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்
பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு
வேம்புமுத றடிந்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிப் பொறைய கேட்டருள்
கொற்கையி லிருந்த †வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்ல ரீரைஞ் ஞூற்றுவ
ரொருமுலை குறைத்த திருமா பத்தினிக்
கொருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி
யுரைசெல வெறுத்த மதுரை மூதா
ரரசுகெடுத லலம்வரு மல்லற் காலைத்
தென்புல மருங்கிற் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கு முறைமுதற் கட்டிலி

* "ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோ, ரொன்பதின்மர் வீழ வாயிற் புறத் திறுத்து" என்றார் பதிற்றுப்பத்திலும்; ஐந்தாம்பத்தின் பதிகம்.

† இளங்கோச்செழியனென்றும் பாடம்.

நிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
வொருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறினா
னூழிதொ றூழி யுலகங் காத்து
வாழ்க வெங்கோ வாழிய பெரிதென
மறையோன் கூறிய மாற்ற மெல்லா
மிறையோன் கேட்டாங் கிருந்த வெல்லையு
ளகல்வாய் ஞால மாரிருள் விழுங்கப்
பகல்செல *முதிர்ந்த படர்கூர் மாலைச்
செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க
வந்திச் செக்கர் வெண்பிறை தோன்றப்
பிறையேர் வண்ணம் பெருந்தகை நோக்க
விறையோன் செவ்வியிற் கணியெழுந் துரைப்போ
னெண்ணான்கு மதியம் வஞ்சிநீங் கியது
மண்ணாள் வேந்தே வாழ்கென் றேத்த
நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த
கொடும்பட நெடுமதிற் கொடித்தேர் வீதியுட்
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
வுறையுண் முடுக்க ரொருதிறம் போகி
வித்தகர் கைவினை விளங்கிய கொள்கைச்
சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்
கோயி லிருக்கைக் கோமக னேறி
வாயி லாளரின் மாடலற் கூஉ
யிளங்கோ வேந்த னிறந்ததற் பின்னர்
வளங்கெழு நன்னாட்டு மன்னவன் கொற்றமொடு
செங்கோற் றன்மை தீதின் றோவென
வெங்கோ வேந்தே வாழ்கென் றேத்தி
மங்கல மறையோன் மாடல னுரைக்கும்
வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப
வெயில்முன் றெறிந்த விகல்வேற் கொற்றமுங்
குறுநடைப் புறவி னெடுந்துயர் தீர
வெறிதரு பருந்தி னிடும்பை நீங்க
வரிந்துடம் பிட்டோ னறந்தரு கோலுந்
திரிந்துவே றாகுங் காலமு முண்டோ

* முரிஞ்சியவென்றும் பாடம்.

171. செங்கேட்வெண்ணைமதுணர
சோழன் [உபசாரம்]

181-6. மணி. 3: 116-25

இதோ வில்லைச் செல்லற் காலையுங்
காவிரி புரக்கு நாடுகிழ வோற்கென்
றருமறை முதல்வன் சொல்லக் கேட்டே
பெருமகன் மறையோற் பேணி யாங்கவற்
காடகப் பெருநிறை யையைந் திரட்டித்
தோடார் போந்தை வேலோன் றன்னிறை
மாடல மறையோன் கொள்கென் *றீத்தாங்
காரிய மன்ன ரையிரு பதின்மரைச்
சீர்கெழு நன்னாட்டுச் செல்கவென் றேவித்
தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த
மாபெருந் தானை மன்ன குமரர்
சுருளிடு தாடி மருள்படு பூங்குழ
லரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண்
விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை யாடமைப் பணைத்தோள்
வளரிள வனமுலைத் தளரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி யாரியப் பேடியோ
டெஞ்சா மன்ன ரிறைமொழி மறுக்குங்
கஞ்சுக முதல்வ ரீரைஞ் ஞூற்றுவ
ரரியிற் போந்தை யருந்தமி ழாற்ற
றறியாது மலைந்த கனக விசயரை
யிருபெரு வேந்தர்க்குக் காட்டிட வேவித்
திருந்துதுயில் கொள்ளா வளவை யாங்கணும்
பரம்புநீர்க் கங்கைப் பழனப் பாசறைப்
பயிலிளந் தாமரைப் பல்வண் டியாழ்செய
வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குணதிசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்
குடதிசை யாளுங் கொற்ற வேந்தன்
வடதிசைத் தும்பை வாகையொடு முடித்துத்
தென்றிசைப் பெயர்ந்த வென்றித் தானையொடு
நிதிதுஞ்சு வியனகர் நீடுநிலை நிவந்து
கதிர்செல வொழித்த கனக மாளிகை
முத்துநிரைக் கொடித்தொடர் முழுவதும் வளைஇய
சித்திர விதானத்துச் செய்பூங் கைவினை

* இவ்வாறு தானஞ்செய்தல் மலைநாட்டரசர்களிடத்து இக்காலத்தும் நடை பெற்றுவருகின்றது; அது துலாபாரதானமென்று சொல்லப்படும்.

யிலங்கொளி மணிநிரை யிடையிடை வகுத்த
விலங்கொளி வயிரமொடு பொலந்தகடு போகிய
மடையமை செறிவின் வான்பொற் கட்டிற்
புடைதிர டமனியப் பொற்கா லமளிமிசை
யிணைபுண ரெகினத் திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்
கெறிந்துகளங் கொண்ட வியறேர்க் கொற்ற
மறிந்துரை பயின்ற வாயச் செவிலியர்
தோட்டுணை துறந்த துயரீங் கொழிகெனப்
பாட்டொடு தொடுத்துப் பல்யாண்டு வாழ்த்தச்
சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று
பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தா
னறுமலர்க் கூந்த னாளணி பெறுகென
வமைவிளை தேறன் மாந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் காவல் கைவிட
வீங்குபுன முணீஇய வேண்டி வந்த
வோங்கியல் யானை தூங்குதுயி லெய்த
வாகை தும்பை வடதிசைச் சூடிய
வேக யானையின் வழியோ நீங்கெனத்
திறத்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்
குறத்தியர் பாடிய குறிஞ்சிப பாணியும்
வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்
கவடி வித்திய கழுதையே ருழவன்
குடவர் கோமான் வந்தா னாளைப்
படுநுகம் பூணாய பகடே மன்ன
ரடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனுந்
தொடுப்பே ருழவ ரோதைப் பாணியுந்
தண்ணம் பொருநை யாடுந ரிட்ட
வண்ணமுஞ் சுண்ணமு மலரும் பரந்து
விண்ணுறை விற்போல் விளங்கிய பெருந்துறை
வண்டுணை மலர்ந்த மணித்தோட்டுக் குவளை
முண்டகக் கோதையொடு முடித்த குஞ்சியின்
முருகுவிரி தாமரை முழுமலர் தோயக்
குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து
வில்லவன் வந்தான் வியன்பே ரிமயத்துப்
பல்லா னிரையொடு படர்குவிர் நீரெனக்

காவல னானிரை நீர்த்துறை படீஇக்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலைவா லுகத்துக்
குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தங்
கழங்காடு மகளி ரோதை யாயத்து
வழங்குதொடி முன்கை மலர வேந்தி
வானவன் வந்தான் வளரிள வனமுலை
தோணல முணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுது மடவீர் யாமெனு
மஞ்சொற் கிளவிய ரந்தீம் பாணியு
மோர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி
வால்வளை செறிய வலம்புரி வலனெழ
மாலைவெண் குடைக்கீழ் வாகைச் சென்னியன்
வேக யானையின் மீமிசைப் பொலிந்து
குஞ்சர வொழுகையிற் கோநக ரெதிர்கொள
வஞ்சியுட் புகுந்தனன் செங்குட் டுவனென.

நீர்ப்படைக்காதை முற்றிற்று.

## இருபத்தெட்டாவது

# நடுகற் காதை.

———:0:———

தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை
மண்ணக நிழற்செய மறவா ளேந்திய
நிலந்தரு திருவி னெடியோன் றனாது
வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூ
ரொண்டொடித் தடக்கையி னொண்மலர்ப் பலிதூஉய்
வெண்டிரி விளக்க மேந்திய மகளி
ருலக மன்னவன் வாழ்கென் றேத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்தர்
யானை வெண்கோ டழுத்திய மார்பு
நீள்வேல் கிழித்த நெடும்புண் ணுகமு
மெய்க்கணை கிழித்த பகட்டெழி லகலமும்
வைவாள் கிழித்த மணிப்பூண் மார்பமு
மைம்மல ருண்கண் மடந்தைய ரடங்காக்
கொம்மை வரிமுலை வெம்மை வேதுறீஇ
யகிலுண விரித்த வம்மென் கூந்தன்
முகிலுழை மதியத்து முரிகருஞ் சிலைக்கீழ்
மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து
சிதரரி பரந்த செழுங்கடைத் தூது
மருந்து மாயதிம் மாலையென் றேத்த
விருங்கனித் துவர்வா யிளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழுங் காமர் செவ்வியிற்
றிருந்தெயி றரும்பிய விருந்தின் மூரலு
மாந்தளிர் மேனி மடவோர் தம்மா
லேந்துபூண் மார்பி னிளையோர்க் களித்துக்
காசறைத் திலகக் கருங்கறை கிடந்த
மாசில்வாண் முகத்து வண்டொடு சுருண்ட
குழலுங் கோதையுங் கோலமுங் காண்மார்
நிழல்கால் மண்டிலந் தம்மெதிர் நிறுத்தி

வணர்கோட்டுச் சீறியாழ் வாங்குபு தழீஇப்
புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்
குரல்குர லாக வருமுறைப் பாலையிற்
றுத்தங் குரலாத் தொன்முறை யியற்கையி
னந்தீங் குறிஞ்சி யகவன் மகளிரின்
மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து
முடிபுற முரிஞ்சுங் கழற்காற் குட்டுவன்
குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல
வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்
பலர்புகழ் மூதூர்க்குக் காட்டி நீங்க
மைந்தரு மகளிரும் வழிமொழி கேட்ப
வைங்கணை நெடுவே ளரசுவீற் றிருந்த
வெண்ணிலா முன்றிலும் வீழ்பூஞ் சேக்கையு
மண்ணீட் டரங்கமு மலர்ப்பூம் பந்தரும்
வெண்கா லமளியும் விதானவே திகைகளுந்
தண்கதிர் மதியந் தான்கடி கொள்ளப்
படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்
திடைநின் றோங்கிய நெடுநிலை மேருவிற்
கொடிமதின் மூதூர் நடுநின் றோங்கிய
தமனிய மாளிகைப் புனைமணி யரங்கின்
வதுவை வேண்மான் மங்கல மடந்தை
மதியேர் வண்ணங் காணிய வருவழி
யெல்வளை மகளி ரேந்திய விளக்கம்
பல்லாண் டேத்தப் பரந்தன வொருசார்
மண்கணை முழவும் வணர்கோட் டியாழும்
பண்கனி பாடலும் பரந்தன வொருசார்
மான்மதச் சாந்தும் வரிவெண் சாந்துங்
கூனுங் குறளுங் கொண்டன வொருசார்
வண்ணமுஞ் சுண்ணமு மலர்பூம் பிணையலும்
பெண்ணணிப் பேடிய ரேந்தின ரொருசார்
பூவும் புகையு மேவிய விரையுந்
தூவியஞ் சேக்கை சூழ்ந்தன வொருசா
ராடியு மாடையு மணிதரு கலன்களுஞ்
சேடியர் செல்வியி னேந்தின ரொருசா
ராங்கவ டன்னுட னணிமணி யரங்கம்
வீங்குநீர் ஞால மாள்வோ னேறித்

திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவுஞ்
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை யசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னாக வோங்கிய
விமையவ னாடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச சாக்கைய னாடலின் மகிழ்ந்தவ
னேத்தி நீங்க விருநில மாள்வோன்
வேத்தியன் மண்டப மேவிய பின்னர்
நீலன் முதலிய கஞ்சுக மாக்கண்
மாடல மறையோன் றன்னொடுந் தோன்றி
வாயி லாளரின் மன்னவற் கிசைத்தபின்
கோயின் மாக்களிற் கொற்றவற் றொழுது
தும்பை வெம்போர்ச் சூழ்கழல் வேந்தே
செம்பியன் மூதூர்ச் சென்றுபுக் காங்கு
வச்சிர மவந்தி மகதமொடு குழீஇய
சித்திர மண்டபத் திருக்க வேந்த
னமரகத் துடைந்த வாரிய மன்னரொடு
தமரிற் சென்று தகையடி வணங்க
நீளம ரழுவத்து நெடும்பே ராண்மையொடு
வாளுங் குடையு மறக்களத் தொழித்துக்
கொல்லாக் கோலத் துயிருய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்றெனத்
தலைத்தேர்த் தானைத் தலைவற் குரைத்தனன்
சிலைத்தா ரகலத்துச செம்பியர் பெருந்தகை
யாங்குநின் றகன்றபி னறக்கோல் வேந்தே
யோங்குசீர் மதுரை மன்னவற் காண
வாரிய மன்ன ரமர்க்களத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் காம்புநனி சிறந்த
சயந்தன் வடிவிற் றலைக்கோ லாங்குக்
கயந்தலை யானையிற் கவிகையிற் காட்டி
யிமயச் சிமயத் திருங்குயி லாலுவத்

துமையொரு பாகத் தொருவனை வணங்கி
யமர்க்கள மரசன தாகத் துறந்து
தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேற்
கொதியழற் சீற்றங் கொண்டோன் கொற்றம்
புதுவ தென்றனன் போர்வேற் செழியனென்
றேனை மன்ன ரிருவருங் கூறிய
நீண்மொழி யெல்லா நீலன் கூறத்
தாமரைச் செங்கண் டழனிறங் கொள்ளக்
கோமக னகுதலுங் குறையாக் கேள்வி
மாடல னெழுந்து மன்னவர் மன்னே
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென் றேத்திக்
கறிவளர் சிலம்பிற் றுஞ்சும யானையிற்
சிறுகுர னெய்தல் *வியலூ ரெறிந்தபி
னார்புனை தெரிய லொன்பது மன்னரை
நேரி வாயி னிலைச்செரு வென்று
நெடுந்தேர்த் தானையொ டிடும்பிற் புறத்திறுத்துக்
கொடும்போ ரகடந்து நெடுங்கட லோட்டி
யுடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக்
கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்
நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே
புரையோர் தம்மொடு பொருந்த வுணர்ந்த
வரச ரேறே யமைகநின் சீற்ற
மண்ணாள் வேந்தே நின்வா ணாட்க
டண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க
வகழ்கடன் ஞால மாள்வோய் வாழி
யிகழா தென்சொற் கேட்டல் வேண்டும்
வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னு
மறக்கள வேள்வி செய்யா தியாங்கணு
மறக்கள வேள்வி செய்வோ யாயினை
வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிநி னூங்கணோர் மருங்கு
கடற்கடம் பெறிந்த காவல னாயினும்
விடர்ச்சிலை பொறித்த விறலோ னாயினு

* வியலூரென்றும் பாடம்.

நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோ னாயினும்
போற்றி மன்னுயிர் முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவ னாயினும்
வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினு
மிகற்பெருந் தானையோ டிருஞ்செரு வோட்டி
யகப்பா வெறிந்த வருந்திற லாயினு
முருகெழு மரபி னயிரை மண்ணி
யிருகட னீரு மாடினோ னாயினுஞ்
சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினு
மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரீங்கிற்
செல்வ நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமி ழிகழ்ந்த வாரிய மன்னரிற்
கண்டனை யல்லையோ காவல் வேந்தே
யிளமை நில்லா தென்பதை யெடுத்திங்
குணர்வுடை மாக்க ளுரைக்கல வேண்டா
திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவி னெய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் மறிக்கினு மறிக்கு
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்துமவ்
விலங்கின் யாக்கை விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணு
மாடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது
செய்வினை வழித்தா யுயிர்செலு மென்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலி
னெழுமுடி மார்பநீ யேந்திய திகிரி
வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே
யரும்பொருட் பரிசிலே னல்லே னியானும்
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்

மலர்தலை யுலகத் துயிர்போகு பொதுநெறி
புலவரை யிறந்தோய் போகுதல் பொறேஎன்
வானவர் போற்றும் வழிநினக் களிக்கு
நான்மறை மருங்கின் வேள்விப் பார்ப்பா
னருமறை மருங்கி னரசர்க் கோங்கிய
பெருநல் வேள்விநீ செயல் வேண்டு
நாளைச் செய்குவ மறமெனி னின்றே
கேள்வி நல்லுயி ரீங்கினு நீங்கு
மிதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
வேள்விக் கிழத்தி யிவளொடுங் கூடித்
தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற
வூழியோ டூழி யுலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை யென்று
மறையோன் மறைநா வுழுது வான்பொரு
ளிறையோன் செவிசெறு வாக வித்தலின்
வித்திய பெரும்பதம் விளைந்துபத மிகுத்துத்
துய்த்தல் வேட்கையிற் சூழ்கழல் வேந்த
னான்மறை மரபி னயந்தெரி நாவிற்
கேள்வி முடித்த வேள்வி மாக்களை
மாடல மறையோன் சொல்லிய முறைமையின்
வேள்விச் சாந்தியின் விழாக்கொள வேவி
யாரிய வரசரை யருஞ்சிறை நீக்கிப்
பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ்நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்
வேளா விக்கோ மாளிகை காட்டி
நம்பெரு வேள்வி முடித்ததற் பின்னாட்
டம்பெரு நெடுநகர்ச் சார்வதுஞ் சொல்லியம்
மன்னவர்க் கேற்பன செய்க நீயென
வில்லவன் கோதையை விருப்புட னேவிச்
சிறையோர் கோட்டஞ் சீமின் யாங்கணுங்
கறைகெழு நல்லூர்க் கறைவீடு செய்ம்மென
வழும்பில் வேளோ டாயக் கணக்கரை
முழங்குநீர் வேலி மூதூ ரேவி
யருந்திற லரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்

பண்டையோ ருரைத்த தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேத்தும் பத்தினி யாகலி
னார்புனை சென்னி யரசற் களித்துச்
செங்கோல் வளைய வுயிர்வா ழாமைத்
தென்புலங் காவன் மன்னவற் களித்து
வஞ்சினம் வாய்த்தபி னல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்த ரென்பதை
வடதிசை மருங்கின் மன்னவ ரறியக்
குடதிசை வாழுங் கொற்றவற் களித்து
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்து
நன்னா டணைந்து நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழற் பொருந்திய நங்கையை
யறக்களத் தந்தண ராசான் பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழைய நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்
திமையவ ருறையு மிமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து
வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை நன்கல முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி
வேள்வியும் விழாவு நாடொறும் வகுத்துக்
கடவுண் மங்கலஞ் செய்கென வேவினன்
வடதிசை வணக்கிய மன்னவ ரேறென.

நடுகற்காதை முற்றிற்று.

# இருபத்தொன்பதாவது

# வாழ்த்துக்காதை.

## உரைப்பாட்டு மடை.

குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத் திகழொளிஞாயிற்றுச் சோழன்மக ளீன்றமைந்தன் கொங்கர் செங் களம்வேட்டுக் கங்கைப்பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன் சினஞ்செருக்கி வஞ்சியுள்வந் திருந்தகாலை வடவாரிய மன்னராங்கோர் மடவரலை மாலைசூட்டி யுடனுறைந்த விருக்கைதன்னி லொன்றுமொழி நகையினராய்த் தென்றமிழ்நா டாளும்வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து மின்றவழு மிமயநெற்றியில் விளங்குவிற்புலி கயல்பொறித்தநா ளெமபோலு முடிமன்னரீங் கில்லைபோலுமென்றவார்த்தை யங்குவாழு மாதவர்வந் தறிவுறுத்த விடத்தாங்க ணருள்கின்ற மணிவட்டைக் குணில்கொண்டு துரந்ததுபோ லிமயமால்வரைக் கற்கடவுளா மென்ற வார்த்தை யிடந்துரப்ப வாரியநாட் டரசோட்டி யவர்முடித்தலை யணங் காகிய பேரிமயக் கற்சுமத்திப் பெயர்ந்துபோந்து நயந்தகொள்கையிற் கங்கைப்பேர் யாற்றிருந்து நங்கைதன்னை நீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மைநீங்கி வஞ்சிமா நகர்புகுந்து நிலவரசர் நீண்முடியாற் பலர் தொழு படிமங்காட்டித் தடமுலைப் பூசலாட்டியைக் கடவுண்மங்கலஞ் செய்தபின்னாட் கண்ணகிதன்கோட்டத்து மண்ணரசர் திறைகேட்புழி யலம்வந்த மதிமுகத்திற் சிலசெங்கய னீருமிழப் பொடியாடிய கருமுகிறன் புறம்புதைப்ப வறம்பழித்துக் கோவலன்றன் வினையுருத்துக குறுமகனாற் கொலையுண்ணக் காவலன்ற னிடஞ்சென்ற கண்ணகிதன் கண்ணீர்கண்டு மண்ணரசர் பெருந்தோன்ற லுண்ணீரற் றுயிரிழந்தமை மாமறையோன் வாய்க்கேட்டு மாசாத்துவான் றன்றுறப்பவு மனைகிழத்தி யுயிரிழப்பவு மெனைப்பெருந் துன்பமெய்திக் காவற்பெண்டு மடித்தோழியுங் கடவுட்சாத்த னுடனுறைந்த தேவந்தியு முடன்கூடிச் சேயிழையைக் காண்டுமென்று மதுரைமா நகர்புகுந்து முதிராமுலைப் பூசல் கேட்டாங் கடைக்கலமிழந் துயிரிழந்த விடைக்குலமக ளிடமெய்தி யையையவண் மகளோடும் வையையொரு வழிக்கொண்டு மாமலைமீ மிசையேறிக் கோமகடன் கோயில்புக்கு நங்கைக்குசசிறப்பயர்ந்த செங்குட்டுவற்குத் திறமுரைப்பார்மன்.

தேவந்திசொல்

முடிமன்னர் மூவருங் காத்தோம்புந் தெய்வ
வடபே ரிமய மலையிற் பிறந்து
கடுவரற் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர்
சோணாட்டார் பாவைக்குத் தோழிநான் கண்டீர்

காவற்பெண்டுசொல்

மடம்படு சாயலாண் மாதவி தன்னைக்
கடம்படாள் காதற் கணவன்கைப் பற்றிக்
குடம்புகாக் கூவற கொடுங்கானம் போந்த
தடம்பெருங் கண்ணிக்குத் தாயர்நான் கண்டீர்
தண்புகார்ப் பாவைக்குத் தாயர்நான் கண்டீர்

அடித்தோழிசொல்

தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த
வெற்பயந் தாட்கு மெனக்குமோர் சொல்லில்லைக்
கற்புக் கடம்பூண்டு காதலன் பின்போந்த
பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்
பூம்புகார்ப் பாவைக்குத் தோழிநான் கண்டீர்

தேவந்தியரற்று

செய்தவ மில்லாதேன் தீக்கனாக் கேட்டநா
ளெய்த வுணரா திருந்தேன்மற் றென்செய்தேன்
மொய்குழன் மங்கை முலைப்பூசல் கேட்டநா
ளவ்வை யுயிர்வீவுங் கேட்டாயோ தோழீ
யம்மாமி தன்வீவுங் கேட்டாயோ தோழீ

காவற்பெண்டரற்று

கோவலன் றன்னைக் குறுமகன் கோளிழைப்பக்
காவலன் றன்னுயிர் நீத்ததுதான் கேட்டேங்கிச்
சாவதுதான் வாழ்வென்று தானம் பலசெய்து
மாசாத்து வான்றுறவுங் கேட்டாயோ வன்னை
மாநாய்கன் றன்றுறவுங் கேட்டாயோ வன்னை

அடித்தோழியரற்று

காதலன் றன்வீவுங் காதலிநீ பட்டதூவு
மேதிலார் தாங்கூறு மேச்சுரையுங் கேட்டேங்கிப்

போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதா னம்புரிந்த
மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழீ
மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழீ

தேவந்தி ஐயையைக்காட்டியரற்றியது

ஐயந்தீர் காட்சி யடைக்கலங் காத்தோம்ப
வல்லாதேன் பெற்றேன் மயலென் றுயிர்நீத்த
அவ்வை மகளிவடா னம்மணம் பட்டிலா
வைவெயிற் றையையைக் கண்டாயோ தோழீ
மாமி மடமகளைக் கண்டாயோ தோழீ

செங்குட்டுவன் கூற்று

என்னேயிஃ தென்னேயி தென்னேயி தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றோட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால்

செங்குட்டுவற்குக்
கண்ணகியார் கடவுணல்லணிகாட்டியது

தென்னவன் றீதிலன் றேவர்கோன் றன்கோயி
னல்விருந் தாயினா னானவன் றன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலே
னென்னொடுந் தோழீமீ ரெல்லீரும் வம்மெல்லாம்

வஞ்சிமகளிர்சொல்

வஞ்சியீர் வஞ்சி யிடையீர் மறவேலான்
பஞ்சடி யாயத்தீ ரெல்லீரும் வம்மெல்லாங்
கொங்கையாற் கூடற் பதிசிதைத்துக் கோவேந்தைச்
செஞ்சிலம்பால் வென்றாளைப் பாடுதும் வம்மெல்லாந்
தென்னவன் றன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்

செங்கோல் வளைய வுயிர்வாழார் பாண்டியரென்
றெங்கோ முறைநா வியம்பவிந் நாடடைந்த
பைந்தொடிப் பாவையைப் பாடுதும் வம்மெல்லாம்
பாண்டியன் றன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்

ஆயத்தார்சொல்

*வானவ னெங்கோ மகளென்றாம் வையையார்
கோனவன்றான் பெற்ற கொடியென்றாள் - வானவனை

*இவ்வெண்பா, சிலபிரதிகளிற் காணப்படவில்லை.

வாழ்த்துவோ னாமாக வையையார் கோமானை
வாழ்த்துவா டேவ மகள்

வாழ்த்து

தொல்லை வினையாற் றுயருழந்தாள் கண்ணினீர்
கொல்ல வுயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ
வாழியரோ வாழி வருபுனனீர் வையை
சூழு மதுரையார் கோமான்றன் றொல்குலமே

மலையரையன் பெற்ற மடப்பாவை தன்னை
நிலவரசர் நீண்முடிமே லேற்றினான் வாழியரோ
வாழியரோ வாழி வருபுனனீர்த் தண்பொருனை
சூழ்தரும் வஞ்சியார் கோமான்றன் றொல்குலமே

எல்லாநாம்
காவிரி நாடனைப் பாடுதும பாடுதும
பூவிரி கூந்தல் புகார்

அம்மானைவரி

வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோ
னோங்கரணங் காத்த வுரவோன்யா ரம்மானை
யோங்கரணங் காத்த வுரவோ னுயர்விசும்பிற்
றூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை

புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யா ரம்மானை
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்முன் வந்த
கறவை முறைசெய்த காவலன்கா ணம்மானை
காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை

கடவரைக ளோரெட்டுங் கண்ணிமையார் காண
வடவரைமேல் வாள்வேங்கை யேற்றினன்யா ரம்மானை
வடவரைமேல் வாள்வேங்கை யேற்றினன் றிக்கெட்டுங்
குடைநிழலிற் கொண்டளித்த கொற்றவன்கா ணம்மானை
கொற்றவன்றன் பூம்புகார் பாடேலோ ரம்மானை

அம்மனை தங்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடுந் தகையேலோ ரம்மானை
தம்மனையிற் பாடுந் தகையெலாந் தார்வேந்தன்

கொம்மை வரிமுலைமேற் கூடவே யம்மானை
கொம்மை வரிமுலைமேற் கூடிற் குலவேந்த
னம்மென் புகார்நகரம் பாடேலோ ரம்மானை

கந்துகவரி

பொன்னிலங்கு பூங்கொடி பொலஞ்செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைக ளார்ப்பவார்ப்ப வெங்கணுந்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந்த டித்துமே

பின்னுமுன்னு மெங்கணும்பெ யர்ந்துவந்தெ ழுந்துலாய்
மின்னுமின்னி ளங்கொடி வியனிலத்தி ழிந்தெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந்த டித்துமே

துன்னிவந்து கைத்தலத்தி ருந்ததில்லை நீணிலந்
தன்னினின்று மந்தரத்தெ ழுந்ததில்லை தானெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந்த டித்துமே

ஊசல்வரி

வடங்கொண் மணியூசன் மேலிரீஇ யையை
யுடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமே லூக்கக்
கடம்பு முதறடிந்த காவலனைப் பாடிக்
குடங்கைநெடுங் கண்பிறழ வாடாமோ வூசல்
கொடுவிற் பொறிபாடி யாடாமோ வூசல்

ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் றிறம்பாடிக்
கார்செய் குழலாட வாடாமோ வூசல்
கடம்பெறிந்த வாபாடி யாடாமோ வூசல்

வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கற்
றென்குமரி யாண்ட செருவிற் கயற்புலியான்
மன்பதைகாக் குங்கோமான் மன்னன் றிறம்பாடி
மின்செ யிடைநுடங்க வாடாமோ வூசல்
விறல்விற் பொறிபாடி யாடாமோ வூசல்

வள்ளைப்பாட்டு

தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழ லவைப்பார் புகாமகளி
ராழிக் கொடித்திண்டேர்ச் செம்பியன் வம்பலர்த்தார்ப்
பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல்
பாவைமா ராரிக்கும் பாடலே பாடல்

பாடல்சான் முத்தம் பவழ வுலக்கையான்
மாட மதுரை மகளிர் குறுவரே
வானவர்கோ னாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்
வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்

சந்துரற் பெய்து தகைசா லணிமுத்தம்
வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டாற்
கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை
படர்ந்த நிலம்போர்த்த பாடலே பாடல்
பனந்தோ டளங்கவரும் பாடலே பாடல்

ஆங்கு, நீணில மன்னர் நெடுவிற் பொறையனற்
றாடொழுதார் வாழ்த்த நமக்கரிது சூழொளிய
வெங்கோ மடந்தையு மேத்தினா ளீடூழி
செங்குட் டுவன்வாழ்க வென று. *

## 29. வாழ்த்துக்காதை முற்றிற்று.

* பத்தினிக்கடவுள், நெடுஞ்செழியனையும் பெருங்கிள்ளியையும் வாழ்த்தியதாக இளங்கோவடிகள் கூறியபாடல்கள் கையெழுத்துப்பிரதிகளிற் காணப்படவில்லை.

## முப்பதாவது

# வரந்தருகாதை.



வடதிசை வணக்கிய வானவர் பெருந்தகை
கடவுட் கோலங் கட்புலம் புக்கபின்
றேவந் திகையைச் செவ்விதி னோக்கி
வாயெடுத் தரற்றிய மணிமே கலையார்
யாதவ டுறத்தற் கேதுவீங் குரையெனக்
கோமகன் கொற்றங் குறைவின் றோங்கி
நாடு பெருவளஞ் சுரக்கென் றேத்தி
யணிமே கலையா ராயத் தோங்கிய
மணிமே கலைதன் வான்றுற வுரைக்கு
மமையீ ரோதி வகைபெறு வனப்பி
னைவகை வகுக்கும் பருவங் கொண்டது
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்க
ணவ்விய மறிந்தன வதுதா னறிந்திலை
ளொளிர்செந் தளிர்ப் பவளத் துள்ளொளி சிறந்த
நித்தில விளநகை நிரம்பா வளவின
புணர்முலை விழுந்தன புல்லக மகன்றது
தளரிடை நுணுகலுந் தகையல்குல் பரந்தது
குறங்கிணை திரண்டன கோலம் பொறாஅ
நிறங்கிளர் சீறடி நெய்தோய் தளிரின
தலைக்கோ லானத்தின் பின்னுள் ளோருங்
குலத்தலை மாக்கள் கொள்கையிற் கொள்ளார்
யாது நின்கருத் தென்செய் கோவென
மாதவி நற்றாய் மாதவிக் குரைப்ப
வருகவென் மடமகள் மணிமே கலையென்
றுருவி லாள னொருபெருஞ் சிலையொடு
விரைமலர் வாளி வெறுநிலத் தெறியக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறம் படுத்தனள்
ளாங்கது கேட்ட வரசனு நகரமு

மோங்கிய நன்மணி யுறுகடல் வீழ்த்தோர்
தம்பிற முன்பந் தாநனி யெய்தச்
செம்மொழி மாதவர் சேயிழை நங்கை
தன்றுற வெமக்குச் சாற்றின ளென்றே
யன்புறு நன்மொழி யருளொடுங் கூறினர்
பருவ மன்றியும் பைந்தொடி நங்கை
திருவிழை கோல நீங்கின ளாதலி
னரற்றின னென்றாங் கரசற் குரைத்தபின்
குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழத்
துடித்தனள் புருவந் துவரிதழ்ச் செவ்வாய்
மடித்தெயி றரும்பினள் வருமொழி மயங்கினட்
டிருமுகம் வியர்த்தனள் செங்கண் சிவந்தனள்
கைவிட் டோச்சினள் கால்பெயர்த் தெழுந்தனள்
பலரறி வாராத தெருட்கியள் மருட்கிய
ளுலறிய நாவின ளுயர்மொழி கூறித்
தெய்வமுற் றெழுந்த தேவந் திகைதான்
கொய்தளிர்க் குறிஞ்சிக் கோமான் றன்முன்
கடவுண் மங்கலங் காணிய வந்த
மடமொழி நல்லார் மாணிழை யோரு
ளரட்டன் செட்டிதன் னாயிழை யீன்ற
விரட்டையம் பெண்க ளிருவரு மன்றியு
மாடக மாடத் தரவணைக் கிடந்தோன்
சேடக் குடும்பியின் சிறுமக ளீங்குளள்
மங்கல மடந்தை கோட்டத் தாங்கட்
செங்கோட் டுயர்வரைச் சேணுயர் சிலம்பிற்
பிணிமுக நெடுங்கற் பிடர்த்தலை நிரம்பிய
வணிகயம் பலவுள வாங்கவை யிடையது
கடிப்பகை நுண்கலுங் கவிரிதழ்க் குறுங்கலு
மிடிக்கலப் பன்ன விழைந்துகு நீரு
முண்டோர் சுனையத னுளபுக் காடினர்
பண்டைப் பிறவிய ராகுவ ராதலி
னாங்கது கொணர்ந்தாங் காயிழை கோட்டத்
தோங்கிருங் கோட்டி யிருந்தோ யுன்கைக்
குறிக்கோட் டகையது கொள்கெனத் தந்தே
னுறித்தாழ் கரகமு முன்கைய தன்றே
கதிரொழி காறுங் கடவுட் டன்மை

மறப்பயன் விளைதலு மறப்பயன் விளைதலும்
பிறந்தவ ரிறத்தலு மிறந்தவர் பிறத்தலும்
புதுவ தன்றே தொன்றியல் வாழ்க்கை
யானே றூர்ந்தோ னருளிற் றோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவ னாகலிற்
செய்தவப் பயன்களுஞ் சிறந்தோர் படிவமுங்
கையகத் தனபோற் கண்டனை யன்றே
யூழிதோ றூழி யுலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை யென்ற
மாடல மறையோன் றன்னொடு மகிழ்ந்து
பாடல்சால் சிறப்பிற் பாண்டிநன் னாட்டுக்
கலிகெழு கூடல் கதழெரி மண்ட
முலைமுகந் திருகிய மூவா மேனிப்
பத்தினிக் கோட்டப் படிப்புறம் வகுத்து
நித்தல் விழாவணி நிகழ்கென் றேவிப்
பூவும் புகையு மேவிய விரையுந்
தேவந் திகையைச் செய்கென் றருளி
வலமுறை மும்முறை வந்தனன் வணங்கி
யுலக மன்னவ னின்றோன் முன்னா
ளருஞ்சிறை நீங்கிய வாரிய மன்னரும்
பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னருங்
குடகக் கொங்கரு மாளுவ வேந்தருங்
கடல்சூ ழிலங்கைக் கயவாகு வேந்தனு
மெந்நாட் டாங்க ணிமைய வரம்பனி
னன்னாட் செய்த நாளணி வேள்வியுள்
வந்தீ கென்றே வணங்கினர் வேண்டத்
தந்தேன் வரமென் றெழுந்த தோர்குர
லாங்கது கேட்ட வரசனு மரசரு
மோங்கிருந் தானையு முறையோ டேத்த
வீடுகண் டவர்போன் மெய்ந்நெறி விரும்பிய
மாடல மறையோன் றன்னொடுங் கூடித்
தாழ்கழன் மன்னர் தன்னடி போற்ற
வேள்விச் சாலையின் வேந்தன் பெயர்ந்தபி
னியானுஞ் சென்றே னென்னெதி ரெழுந்து
தேவந் திகைமேற் றிகழ்ந்து தோன்றி
வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை

றூந்தை தாணிழ லிருந்தோய் நின்னை
யரசுவீற் றிருக்குந் திருப்பொறி யுண்டென்
றுரைசெய் தவன்மே லுருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட் டுவன்றன் செல்ல னீங்கப்
பகல்செல் வாயிற் படியோர் தம்மு
னகலிடப் பார மகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்
தந்தமி லின்பத் தரசாள் வேந்தென்
றென்றிற முரைத்த விமையோ ரிளங்கொடி
தன்றிற முரைத்த தகைசா னன்மொழி
தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்
பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்
றெய்வந் தெளிமின் றெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமி
னூனூண் டுறமி னுயிர்க்கொலை நீங்குமின்
றானஞ் செய்மின் றவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் றீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மி
னறவோ ரவைக்கள மகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமி
னறமனை காமி னல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமி
னிளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
வுளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென.

## கட்டுரை.

முடியுடை வேந்தர் மூவ ருள்ளுங்
குடதிசை யாளுங் கொற்றங் குன்றா
வார மார்பிற் சேரர்குலத் துதித்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம

பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் வானவர் வரவு
மொழியா வின்பத் தவருடை நாட்டுக்
குடியின் செல்வமுங் கூழின் பெருக்கமும்
வரியுங் குரவையும் விரவிய கொள்கையிற்
புறத்துறை மருங்கி னறத்தொடு பொருந்திய
மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு
பொங்கிரும் பரப்பிற் கடல்பிறக் கோட்டிக்
கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய
செங்குட் டுவனோ டொருபரிசு நோக்கிக்
கிடந்த வஞ்சிக் காண்ட முற்றிற்று.

## வஞ்சிக்காண்டம் முற்றிற்று.

### கட்டுரை.

குமரி வேங்கடங் குணகுட கடலா
மண்டிணி மருங்கிற் றண்டமிழ் வரைப்பிற்
செந்தமிழ் கொடுந்தமி ழென்றிரு பகுதியி
னைந்திணை மருங்கி னறம்பொரு ளின்ப
மக்க டேவ ரெனவிரு சார்க்கு
மொத்த மரபி னொழுக்கொடு புணர
வெழுத்தொடு புணர்ந்தசொல் லகத்தெழு பொருளை
யிழுக்கா யாப்பி னகனும் புறனு
மவற்று வழிப்படூஉஞ் செவ்விசிறந் தோங்கிய
பாடலு மெழாலும் பண்ணும் பாணியு
மரங்கு விலக்கே யாடலென் றனைத்து
மொருங்குடன் றழீஇ யுடம்படக் கிடந்த
வரியுங் குரவையுஞ் சேதமு மென்றிவை
தெரிவுறு வகையாற் செந்தமி ழியற்கையி
லாடிநன் னிழலி னீடிருங் குன்றங்
காட்டு வார்போற் கருத்துவெளிப் படுத்து
மணிமே கலைமே லுரைப்பொருண் முற்றிய
சிலப்பதிகார முற்றும்.

## சிலப்பதிகாரம் முற்றிற்று.

# பிழைதிருத்தம்.

## முகவுரை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| | ௩ | துரை | துறை |

## சிலப்பதிகாரம் அடியார்க்குநல்லாருரை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| ச | உ௩ | சாரார் | சார் |
| க௩ | கரு | நசை | நசைஇ |
| கரு | க௩ | கல் | கற் |
| கசா | உஅ | நசை | நசைஇ |
| உஎ | கரு | களை | கள் |
| உகூ | ௩0 | ஒப்பி | ஒப்ப |
| ௩க | கஎ | டறுத்து | டறுத்தது |
| ௪ச | கஅ | பேரியிற் | பேரிற் |
| ,, | ௩சா | டியா | டியுமா |
| ருச | உஅ | பேரி[illegible] | பேரிற் |
| ருகூ | ௩0 | ணிய[illegible] | ணிப்பி |
| ,, | ௩ரு | கைகொ | கைக்கொ |
| சாக | ரு | குணர் | குநர் |
| சாஎ | கூஎ | ஹீஹா | ஈஹா |
| எக | க | கானல் | காண் |
| ,, | உ | ,, | ,, |
| அஉ | ச | ணியு | ணியு, |
| அ௩ | உ | இட்[illegible] | ரிட |
| ,, | ரு | மிவ[illegible] | மிவற்று |
| கூசா | ௩கூ | புருடா | புருட |
| கூகூ | அ | டியபி | டிப்பி |
| ,, | ௩ரு | நீஇஇ | நீஇ |
| க0உ | உ | நிற்கும் | நிற்கும்; |
| க0ரு | உக | | பா - நிலமண்டிலம் |
| க0கூ | உ0 | போல | போல். |
| ககஉ | கஎ | அக்கோலத்தினை | |
| ,, | கூஎ | யெறிப் | றிப் |
| கஉ௩ | கூக | யதி | யத்தி |
| கஉஎ | ௩உ | சேந் | செந் |

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௧௩௬ | உ௫ | கண் | |
| ௧௩௮ | ௧௧ | ...மாசற | மாசற .. |
| ௧௪௩ | உ௩ | அதுபசிய | பசிய |
| ௧௪௪ | ௧0 | விதிகள் | காரர் |
| ௧௫௭ | ௩௫ | பண்டிய | பண்ணிய |
| ௧௭௧ | உ௬ | வன. | வன. "திங்கள்" முலிய மூன்றும் இடைமடக்கிவந்தன. |
| ௧௮௭ | ௩௬ | மைத்தன்மைமை | மைமை |
| ௧௯௬ | ௮ | வலற் | வலர்க் |
| ௧௯௮ | ௬ | டுகொடு | டுங்கொடு |
| உ0உ | ௩உ | கும். | கும் ; |
| உ0௬ | ௬ | தீதறு | தீதுறு |
| உ௧௩ | உ௪ | மணி | பணி |
| உ௧௭ | ௧௩ | செய்த | செய்து |
| உஉ0 | ௩ | தாகக் | தாக . |
| உஉ௧ | ௧௧ | டுக்கை | டுக்கையுமாம். |
| உஉ௮ | ௩௩ | னணி | னணிப் |
| உ௪உ | உ௩ | 'குத்து | பருந்து |
| ,, | உ௭ | ரியகொள் | ரிய கொள் |
| உ௫௪ | ௯ | புங் | பும் |
| உ௬௪ | ௩௧ | ஓம் | ஓம், |
| ௩00 | ௧௮ | திரியா | திரிய |
| ௩0உ | ௯ | யிடுக் | விடுக் |
| ௩௧௩ | ௪ | பண்ணியம | பண்ணியல் |
| ,, | ௩௫ | ,, | ,, |
| ௩௩௬ | ௮ | ௧௧௧ | ௧௧உ |
| ௩௪௩ | ௩0 | கயிறு | கயிறுமாம் |
| ௩௪௬ | ௫ | இலக | "இலக |
| ,, | ௩௪ | சோகப் | சோக |
| ௩௫௩ | உ௫ | றங்குல | றன்குல |
| ௩௬௫ | ,, | றிறல் | றெறல் |
| ௩௭௧ | ௮ | ரமைய | ரமய |
| ௩௯௩ | ௩உ | தந்திரம் | தந்திரகரணம் |
| ௪0௫ | ௩௬ | மூழைத் | மூழை |
| ௪௩௫ | ௪ | பெற்றி | பெற்றிய |
| ௪௪௧ | ௫ | யாம்ப்பா | யாம்பா |
| ௪௫௮ | உ௯ | தர்க்கி | .. |
| ௪௬௩ | ௩௫ | னீர்க்க | னீர்க |

முதிரா தந்நீர் முதிரா மகளிரைத்
தெளித்தனை யாட்டினிச் சிறுகுறு மகளி
ரொளித்த பிறப்பின ராகுவர் காணாய்
பாசண் டன்யான் பார்ப்பனி தனமேன்
மாடல மறையோன் வந்தே னென்றலு
மன்னவன் விம்மித மெய்தியம் மாடலன்
றன்முக நோக்கலுந் தானனி மகிழ்ந்து
கேளிது மன்னா கெடுகநின் றீயது
மாலதி யென்பாண் மாற்றாள் குழவியைப
பாலசுரந் தூட்டப் பழவினை யுருத்துக்
கூற்றுயிர் கொள்ளக் குழவிக் கிரங்கி
யாற்றாத் தன்மைய ளாரஞ ரெய்திப்
பாசண் டன்பாற் பாடு கிடந்தாட்
காசில் குழவி யதன்வடி வாகி
வந்தன ளன்னைநீ வான்றுய ரொழிகெனச்
செந்திறம் புரிந்தோன் செல்லல் னீக்கிப்
பார்ப்பனி தன்னொடு பண்டைத் தாய்பாற்
காப்பியத் தொல்குடிக் கவின்பெற வளர்ந்து
தேவந் திகையைத் தீவலஞ் செய்து
நாலீ ராண்டு நடந்ததற் பின்னர்
மூவா விளநலங் காட்டியென் கோட்டத்து
நீவா வென்றே நீங்கிய சாத்தன்
மங்கல மடந்தை கோட்டத் தாங்க
ணங்குறை மறையோ னாகத் தோன்றி
யுறித்தாழ் கரகமு மென்கைத் தந்து
குறிக்கோள் கூறிப் போயினன் வாரா
னாங்கது கொண்டு போந்தே னாதலி
னீங்கிம் மறையோ டன்மேற் றோன்றி
யந்நீர் தெளியென் றறிந்தோன் கூறினன்
மன்னர் கோவே மடந்தையர் தம்மேற்
றெளித்தீங் கறிகுவ மென்றவன் றெளிப்ப
வொளித்த பிறப்புவந் துற்றதை யாதலிற்
புகழ்ந்த காதலன் போற்றா வொழுக்கி
னிகழ்ந்ததற் கிரங்கு மென்னையு நோக்கா
யேதி னன்னாட் டியாருமி லொருதனிக்
காதலன் றன்னொடு கடுந்துய ருழந்தா

யாள்பெறு மகளே யென்றுணைத் தோழி
வான்றுயர் நீக்கு மாதே வாரா
யென்னோ டிருந்த விலங்கிழை நங்கை
தன்னோ டிடையிருட் டனித்துய ருழந்து
போனதற் கிரங்கிப் புலம்புறு நெஞ்சம்
யானது பொறேஎ னென்மகன் வாராய்
வருபுனல் வையை வான்றுறைப் பெயர்ந்தே
னுருகெழு மூதா ரூர்க்குறு மாக்களின்
வந்தேன் கேட்டேன் மனையிற் காணே
னெந்தா யிளையா யெங்கொளித் தாயோ
வென்றாங் கரற்றி யினைந்தினைந் தேங்கிப்
பொன்றா ழகலத்துப் போர்வெய் யோன்முன்
குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிர்
முதியோர் மொழியின் முன்றி னின்றழத்
தோடலர் போந்தைத் தொடுகழல் வேந்தன்
மாடல மறையோன் றன்முக நோக்க
மன்னர் கோவே வாழ்கென் றேத்தி
முந்நூன் மார்பன் முன்னிய துரைப்போன்
மறையோ னுற்ற வான்றுயர் நீங்க
வுறைகவுள் வேழக் கையகம் புக்கு
வானோர் வடிவம் பெற்றவன் பெற்ற
காதலி தன்மேற் காதல ராதலின்
மேனிலை யுலகத் தவருடன் போகுந்
தாவா நல்லறஞ் செய்தில ரதனா
லஞ்செஞ் சாய லருகா தணுகும்
வஞ்சி மூதூர் மாநகர் மருங்கிற்
பொற்கொடி தன்மேற் பொருந்திய காதலி
னற்புளஞ் சிறந்தாங் கரட்டன் செட்டி
மடமொழி நல்லாண் மனமகிழ் சிறப்பி
னுடன்வயிற் றோரா யொருங்குடன் றோன்றின
ராயர் முதுமக ளாயிழை தன்மேற்
போய பிறப்பிற் பொருந்திய காதலி
னாடிய குரவையி னரவணைக் கிடந்தோன்
சேடக் குடும்பியின் சிறுமக ளாயின
ணற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலு
மற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலு